# நாடும் மக்களும்



ஒன்பதாம் வகுப்பு




இயற்றியவர் :

துரை. பழனிவேல் B.A., B.T.

சிறுமலர் உயர்நிலைப் பள்ளி

சேலம்.

[Paper used : 24 lbs. D/C White Printing]

அஸோஸியேஷன் பப்ளிஷிங் ஹௌஸ்

94-95, புதுத் தெரு, மண்ணடி,

சென்னை—1.

பதிப்புரிமை] 1963 [விலை ரூ. 1-00

# முன்னுரை

நாடும் மக்களும் என்ற தலைப்பில் எழுதப் பெற்ற இச்சிறு நூல் எகிப்து, பாரசீகம், சீனு, ஜப்பான் ஆகிய நாடுகளைப் பற்றியும் அவர்களின் மக்களைப்பற்றி கூறுகிறது. பூவுலகின் சில பகுதிகளில் மனிதர் நாகரிகமற்ற காட்டுமிராண்டிகளாக வாழ்க்கை நடத்திவந்த காலத்தே அரசுகள் வகுத்து, நலமுடன் வாழ்ந்து, வளம்பெற்று உயர்ந்து சிறந்திருந்த பண்டைப்பெருமை நிறைந்த நாடுகளில் சிலவற்றினைப் பற்றித் தொகுத்து இதனை எழுதியதன் நோக்கம், உயர்நிலைப் பள்ளி மேல்வகுப்புக்களில் பயிலும் மாணவர்களுடைய பிறபாடங்களுடன் தாய்மொழி அறிவினையும் அம்மொழித் துணைப் பாடங்களையும் தொடர்பு படுத்துவதேயாகும். இஃது அம் முறையில் உதவும் எனக் கருதுகிறேன். எடுத்துக் கொண்ட நாடுகளைப்பற்றிக் கூறுங்கால் மக்கள், அவர்கள் நடை, உடை, பாவனைகள், தனி இயல்புகள், சிறப்பியல்புகள் ஆகிய செய்திகளும், நாடுகளின் நில வியல்புகளும், பண்டைய வரலாற்றுச் சிறப்புக்களும் பிறவும் குறிப்பிடப்பட்டுள்ளன.

இந்நூலைத் தங்கள் பள்ளிகளில் துணைப்பாடமாக வைத்து மாணவர்கள் பயனடைய உதவுமாறு தலைமையாசிரியர்களையும் தமிழாசிரியர்களையும் வேண்டிக் கொள்ளுகிறேன். இந்நூலை வெளியிட்டு உதவிய அஸோஸியேஷன் பப்ளிஷிங் கம்பெனியாருக்கும் தொகுத்து எழுத உதவிய எனது ஆசிரிய நண்பர் திரு. C. மாதவராவுக்கும், அச்சாகுங்கால் அருகிலிருந்து உதவிய உயர்திரு. T. S. உமாபதி M. A., L. T. அவர்கட்கும் எனது நன்றி.

ஆசிரியன்.

# உள்ளுறை

# நாடும் மக்களும்

(ஒன்பதாம் வகுப்பு)

---

## தோற்றுவாய்

**இன்றைய உலகம் :**

இன்றைய உலகம் இதுநாள் வரை இருந்த நிலையைக் காட்டிலும் நாகரிகத்தில் உயர்ந்து காணப்படுகிறது. பல்வேறு நாடுகளிலும் வாழுகின்ற மக்கள் எளிதில் தொடர்புகொண்டுள்ளனர். மனிதனின் அறிவாற்றல் இன்று இவ் உலக எல்லையைத் தாண்டி வான மண்டலங்களை வெற்றிகொள்ளத் துடிக்கிறது. மனித சமுதாயம் தனது இன்ப வாழ்விற்காக நாடோறும் புதிய புதிய வழிவகைகளை வகுத்துக்கொண்டே வருகிறது. இன்று மனித சமுதாயம் அடைந்துள்ள இந்நிலை ஒரே நாளில், ஒரே ஆண்டில் அல்லது குறுகிய காலத்தில் ஏற்பட்டதன்று; படிப்படியாக வளர்ந்து இந்நிலையை அடைந்துள்ளது. எனினும் உலக நாடுகளில் வாழும் எல்லா மக்களும் ஒரே வகையான நாகரிகத்தையும், பழக்க வழக்கங்களையும், மொழியையும் உடையவர்களாக இல்லை. அவை நாட்டுக்கு நாடு வேறுபட்டு இருக்கின்றன. ஒவ்வொரு நாட்டிலும் அந்தந்த நாட்டு நாகரிகம் எவ்வாறு பழங்காலத்திலிருந்து படிப்படியாக வளர்ச்சியுற்றது என்பதை அறிவது மிக்க இன்பம் பயப்பதாய் இருப்பதோடு அதனால் மனித சமுதாயத்தின் வளர்ச்சியையும் நாம் அறிய முடிகிறது.

பழங்காலத்தில் மக்கள் எத்தகைய நாகரிகத்தோடு வாழ்ந்தார்கள்? அவர்கள் நாகரிகத்தில்

வளர்ச்சியுற்றது எங்ஙனம்? மனித சமுதாயம் இவ் உலகில் எக்காலந்தொட்டு வாழ்கிறது? என்பன போன்ற வினுக்களுக்கு மனிதனின் அறிவாற்றல் விடை கண்டுபிடித்திருக்கிறது. உலகம் தோன்றியது. உலகம் தோன்றிய காலத்திலேயே மனிதனும் இவ் உலகத்தில் தோன்றவில்லே. முதன் முதலில் நீரில் வாழும் சில உயிரினங்கள் தோன்றின. பிறகு நீரிலும், நிலத்திலும் வாழும் உயிரினங்கள் தோன்றின. பிறகு அவை நிலத்திலேயே வாழக்கூடிய வகையில் பல மாறுதல்களேப்பெற்றுப் பெரிய உருவங்களோடு நிலப்பரப்பில் வாழ்ந்தன. சிறிது சிறிதாக அவற்றின் மூளே வளர்ச்சி அடைந்தது. பிறகு குரங்கினம் தோன்றியது. குரங்கிலிருந்து மனிதக் குரங்கு தோன்றியது. (மனிதக் குரங்கு என்பது மனித உருவமும், மிருக உணர்ச்சியும் கொண்ட ஒரு பிராணி.) மனிதக் குரங்கிலிருந்து மனிதன் தோன்றினுன். உலகில் எப்போது மனிதன் தோன்றினுன்? விஞ்ஞானமும், அறிவியலும் மனிதன் ஐந்து இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பே தோன்றியிருக்க வேண்டுமெனக் கூறுகின்றன. மனிதன் தோன்றுவதற்கு முன்பாகவும், அதற்குப் பின்னரும் உயிர் வாழ்ந்திருந்த அநேக உயிரினங்கள் இயற்கையுடன் போராடி அதை வெல்லமுடியாது பூண்டற்றுப் போய்விட்டன. ஆனுல் மனித இனம் மட்டும் இயற்கையின் பல மாறுதல்களோடும் போராடிப் போராடி இன்று வரை நிலேத்துள்ளது. எதனுல்? ஏனைய உயிரினங்களுக்கு இல்லாத அறிவாற்றலே அதற்குக் காரணமாகும்.

ஆதியில் மனிதன் விலங்குகளுடன் விலங்காகவே வாழ்ந்தான். ஆதி மனிதனுக்கும் ஒரு விலங்கிற்கும் அறிவு வளர்ச்சியில் அதிக வேறுபாடு இருக்கவில்லே. பின்னர் மனிதன் விலங்குகளேப் போலல்லா

மல் நடக்கவும், தன்னுடைய கைகளைப் பயன் படுத்தவும் கற்ற பின்னர் அவனது அறிவு பெருகியது. அப்போது தான் வாழ்வதற்காக அவன் இயற்கையுடனும், தன்னைவிட வலிவு மிகுந்த பல உயிரினங்களுடனும் போராட வேண்டியிருந்தது. மிருகங்களைவிட வலிவிலும், உருவத்திலும் மனிதன் சிறியவனாக இருந்த போதிலும் தன் அறிவின் ஆற்றலினால் அவற்றை வெற்றிகொண்டான். உணவிற்காகவும், உறைவிடத்திற்காகவும் மட்டுமே தன் காலத்தையெல்லாம் செலவிட்டு வந்த மனிதன், நாளாக நாளாகத் தன் அறிவின் திறத்தால் கல்லாலும், மரத்தாலும் ஆன சில ஆயுதங்களைப் பயன் படுத்தக் கற்றுக்கொண்டான். அவற்றால் விலங்குகளை முன்னிலும் எளிதாக வேட்டையாடித் தன் உணவைச் சம்பாதித்துக் கொண்டான். இதனால் அவனுக்கு ஓய்வு கிடைத்தது. அவன் சிந்தனை வளர ஆரம்பித்தது. தன்னைத்தானே மகிழ்வித்துக் கொள்ளத் தான் வாழ்ந்து வந்த குகைகளில் சித்திரங்கள் வரைய ஆரம்பித்தான். இவ்வாறு ஆதி மனிதன் வரைந்த சில சித்திரங்களை இன்றைக்கும் நாம் காணலாம்.

சிந்தனையும் அறிவும் பெருகப் பெருக மனிதன் சில மிருகங்களைப் பிடித்துப் பழக்கித் தன்னோடு வைத்துக்கொள்ள ஆரம்பித்தான். அவற்றில் முக்கியமாக நாய், பசு, குதிரை, ஆடு ஆகியவற்றைச் சொல்லலாம். நாய்களைத் தன் வேட்டைக்கு உதவியாகப் பயன்படுத்திக் கொண்டான்; பசுக்களையும், ஆடுகளையும் அவற்றின் பாலுக்காகவும், இறைச்சிக்காகவும் வளர்த்து வந்தான்; வில்லும், அம்பும் அவனுக்கு வேட்டைக் கருவிகளாகப் பயன்பட்டன; இலை தழைகளால் ஆன ஆடைகளை அணிந்து கொண்டான். தற்செயலாக நெருப்பின் உபயோ

கத்தை அறிந்துகொண்டான். களிமண்ணால் பாண்டங்கள் செய்து அவற்றை நெருப்பில் சுட்டும், வெய்யிலில் உலரவைத்தும் பயன்படுத்த ஆரம்பித்தான். நாளடைவில் புல்லாலும், உரோமத்தாலும் ஆடைகளை நெய்யக் கற்றுக்கொண்டான். மனிதன் தன் தேவைகளை இவ்விதமாகச் சிறிது சிறிதாகப் பெருக்கிக்கொண்டே போனான்; தான் வளர்த்து வந்த ஆடு, மாடுகளுக்காகப் புற்றரைகளைத் தேடி இடம்விட்டு இடம் செல்ல வேண்டியிருந்தது. இவ்வாறு துவக்கத்தில் தன் உணவிற்காகவும், தான் வளர்த்து வந்த மிருகங்களின் உணவிற்காகவும் இடம்விட்டு இடம் அலைந்து, நாடோடி வாழ்க்கையை நடத்தி வந்த மனிதன், தனக்கென வீடுகள் கட்டிக்கொண்டு வாழவில்லை. பழங்களின்கொட்டைகளும், சிலவகையான புற்களின் தானிய மணிகளும் நிலத்தில் வீழ்ந்து இயற்கையிலேயே ஒன்று பலவாகப் பெருகுவதைக் கண்ட மனிதன், தானே அவற்றை விதைத்துப் பயிர் செய்ய ஆரம்பித்தான். இதனால் அவன் அலைந்து திரியும் வாழ்க்கையை விட்டு ஓரிடத்திலேயே நிலைத்திருந்து தானியங்களைப் பயிர்செய்து உண்டு வாழத் தலைப்பட்டான்.

இவ்வாறு பயிர்த்தொழில் செய்து வாழக் கற்றுக்கொண்ட மனிதன் இயற்கையிலேயே நீர்வளமும், நிலவளமும், நல்ல தட்பவெப்ப நிலையுமுள்ள இடங்களில் குடியேறி நிலையாக வாழ ஆரம்பித்தான். அவை பெரும்பாலும் நதிக்கரையை ஒட்டிய சம நிலப் பகுதிகளாகவே இருந்தன. அவ்வாறு மனிதன் முதன்முதலில் நிலைத்து வாழ ஆரம்பித்த இடங்கள் எகிப்து, மெசபடோமியா (டைகிரிஸ் நதிக்கும், யூப்பிரட்டீஸ் நதிக்கும் இடைப்பட்ட நிலப் பகுதி, தற்காலத்தில் இராக் என வழங்குகிறது) சிந்து கங்கைச் சமவெளி, சீனாவின் நதிக்கரை யோரங்கள்

முதலியன ஆகும். இங்குத்தான் இதுநாள் வரை விலங்குகள் போல் வாழ்ந்து வந்த மனிதன் தன் இனத்துடன்சேர்ந்து வாழ ஆரம்பித்தான். எனவே மனித சமுதாயத்தின் நாகரிகம் இங்கே யிருந்துதான் தொடங்குகிறது எனலாம்.

சேர்ந்து வாழ்ந்த மனித இனம் அறிவிலும், நாகரிகத்திலும் விரைவாக முன்னேறியது. வண்டிச் சக்கரத்தின் உபயோகத்தையும், மரக் கலப்பையின் உபயோகத்தையும் அவன் அறிந்துகொண்டான். இதனுல் பயிர்த் தொழிலில் அதிக முன்னேற்றம் அடைந்தான். பயிர்த் தொழிலைத் தவிர, மரவேலை, உலோக வேலை ஆகியவற்றில் தேர்ச்சிபெற்ற தொழிலாளர்களும் அக்காலத்தில் இருந்தனர். அவர்கள் நிலையான வீடுகள் கட்டிக்கொண்டு வாழ ஆரம்பித்தனர். அத்தகைய வீடுகள் செங்கற்களாலும், கருங்கற்களாலும், மரத்தாலும் கட்டப்பட்டன. ஒவ்வொரு வேலையிலும் தேர்ச்சி பெற்ற தொழிலாளர்கள் தாங்கள் உருவாக்கியவற்றைப் பிறருக்குக்கொடுத்து, பிறரிடமிருந்து தங்களுக்குத் தேவையானவற்றைப் பண்டமாற்று முறையில் பெற்றனர். இது துவக்க நிலை வியாபாரம் என நாம் கருதலாம். நிலையான வாழ்க்கை நடத்த மனித இனம் தொடங்கிய காலையிலேயே குடும்பம் உருவாயிற்று. பல குடும்பங்கள் சேர்ந்து ஒரு சமுதாயமாக அமைந்தது ; கிராமங்கள் உண்டாயின ; தலைவர்கள் ஏற்பட்டனர் ; சீரான வாழ்க்கை தொடங்கிற்று. இந்த நாகரிகத்தின் வளர்ச்சி கிருஸ்து பிறப்பதற்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே எகிப்து, மெசபடோமியா, இந்தியா, சீனு ஆகிய நாடுகளில் நல்ல நிலையில் இருந்தபோது, உலகின் ஏனைய பகுதிகளில் வாழ்ந்த மக்கள் விலங்குகளைப்போல நாடோடி வாழ்க்கையையே நடத்தி வந்தனர். எனவேதான் வரலாற்று

ஆசிரியர்கள் இந்நாடுகளை "**நாகரிகத்தின் தொட்டில்கள்**" என வழங்குகின்றனர். இனி அடுத்துவரும் பகுதிகளில் இந்நாடுகளில் நாகரிகம் படிப்படியாக வளர்ந்து, எவ்வாறு இன்றுள்ள நிலையை அடைந்துள்ளது என்பதைக் காணலாம்.

# 1. எகிப்து

**ஆப்ரிக்காக்** கண்டத்தில் **நைல் நதி** எதியோபியாவின் தென்பகுதியில் உள்ள மலைகளில் உற்பத்தியாகி வடக்கு நோக்கிப் பாய்கிறது. இதற்கு **நீல நைல்** என்பது பெயர். பூமத்திய ரேகையை அடுத்துள்ள விக்டோரியா ஏரியில் ஒரு நதி உற்பத்தியாகி வடக்கு நோக்கி ஓடி வழியில் நீல நைல் நதியுடன் கலந்துவிடுகிறது. இதற்கு **வெள்ளை நைல்** என்பது பெயர். வெள்ளை நைலும், நீல நைலும் சேர்ந்து நைல் என்னும் பெயருடன் ஏறத்தாழ ஆயிரம் மைல் தூரம் வடக்கு நோக்கி ஓடி மத்தியதரைக் கடலில் கலந்து விடுகிறது. இவ்வாறு நைல் நதி பாய்ந்து வளப்படுத்தும் நிலப் பகுதிக்கு **எகிப்து** என்பது பெயர்.

நைல் நதிமட்டும் அங்குப் பாய்ந்து அந்நிலப் பகுதியை வளப்படுத்தாவிடின் மணலும் குன்றுகளும் நிறைந்த பாலைவனத்தைத் தவிர அப்பகுதியில் வேறொன்றையும் காண முடியாமற் போயிருக்கும். அங்கு மக்களினமே வாழ்ந்திருக்க முடியாது. நைல்நதி எகிப்து நாட்டில் பாய்வதால்தான் அந்நாட்டில் மக்கள் மாண்புற்று வாழ முடிந்தது. எனவேதான் கிரேக்க வரலாற்றுப் பேராசிரியரான **ஹெரொடோடஸ்** என்பவர் அந்நாட்டை "**நைல் நதியின் நன்கொடை**" என்று கூறுகிறார்.

பழங்காலத்திலிருந்தே மக்கள் மிகுந்த நாகரிகத்தோடு வாழ்ந்த நாடுகளில் எகிப்தும் ஒன்ருகும். இன்றைக்கு ஏழாயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே எகிப்தில் சிறந்த நாகரிகம் காணப்பட்டது. ஆனல் தற்காலத்தில் அங்கு வாழும் மக்களுக்கும், அங்குத் தோன்றி வளர்ந்த அப்பழைய நாகரிகத்திற்கும் தொடர்பு கிடையாது. எகிப்து நாகரிகம் பல்லாயிரம் ஆண்டுகள் சிறப்புற்ருேங்கி நின்றபின்னர்ப் பேர் சொல்வதற்கின்றி மறைந்து போய்விட்டது. ஆனல் **பிரமிட்** என்னும் சமாதிக் கோபுரங்களும், **ஸ்பிங்சும்**, அழிந்துபோன கோவில்களும், '**மம்மி**' என்னும் தைலப்பதமிட்ட சவங்களுமே எகிப்தின் பண்டைய நாகரிகத்திற்குச் சான்று பகர்கின்றன.

பண்டைய எகிப்தின் வரலாற்றுச் சிறப்பையும், எகிப்தின் நாகரிகச் சிறப்பையும் நாம் எங்ஙனம் உணரமுடிகிறது? எகிப்தியரின் சவக்குழிகளிலிருந்து அகழ்ந்தெடுக்கப்பட்ட பழம் பொருள்களின் துணையால் அறியமுடிகிறது. எகிப்தியர்கள், உடலைவிட்டு நீங்கிப் போய்விடும் உயிர் மீண்டும் அவ்வுடலை நாடி வரும் என நம்பினுர்கள். எனவே அவர்கள் இறந்தவர்களைப் புதைக்கும்போது அவர்கள் உயிர் வாழ்ந்திருந்தபோது உபயோகித்த எல்லாப் பொருட்களையும் அவர்களுடனேயே புதைத்தார்கள். அவ்வாறு சவத்துடன் காணப்பட்ட முக்கியமான பொருட்களில் சில மிக்க சிறப்பு வாய்ந்தவைகளாக இருந்தன. தானியம், ஆயுதங்கள், அலங்காரப் பொருட்கள், மண்பாண்டங்கள், வாசனைப் பொருட்கள் முதலியன காணப்பட்டன. எகிப்து நாட்டின் பண்டைய வரலாறு **மேனஸ்** என்ற மன்னன் காலத்திலிருந்து துவங்குகிறது. அவன் இயேசு கிறிஸ்து பிறப்பதற்கு மூவாயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன்பாகவே, பிரிந்திருந்த கீழ் எகிப்தையும், மேல்

எகிப்தையும் ஒன்று படுத்தியாண்டான். அவன் காலத்திலிருந்து பல மன்னர்கள் எகிப்தை ஆண்டிருக்கிருர்கள். வரலாற்று ஆசிரியர்கள் அவர்களை முப்பது வமிசங்களாகப் பிரித்திருக்கிருர்கள். ஒவ்வொரு வமிசத்திலும் பல மன்னர்கள் **பாரோ** என்ற பெயருடன் ஆண்டிருக்கிருர்கள். பாரோ என்பது எகிப்திய மன்னர்களுக்குப் பொதுவாக வழங்கிய பெயர். அதன் பொருள் **பெரிய வீடு** என்பதாகும்.

பாரோக்கள் தங்களைச் சாதாரண மக்களை விட மேம்பட்டவர்களாகக் கருதினுர்கள். மக்களும் அவர்களைக் கடவுளர்கள் என்று எண்ணினுர்கள். எகிப்தின் பழங்காலத்தில் மக்கள் அனேக கடவுளர்களை வணங்கி வந்தார்கள். ஆனுல் அவர்கள் உண்மையில் அறிந்திருந்ததும், அதிக சிரத்தையுடன் வணக்கம் செய்து வந்ததுமான கடவுள் அவர்களுடைய மன்னனே. எனவே பாரோக்கள் தங்களைச் **சூரியனுடைய மக்கள்** (Sons of the Sun) என்று கூறிக்கொண்டார்கள். அவர்கள் இறந்தவுடன் தங்கள் உடன்பிறந்த மறைந்த கடவுளர்களோடு போய்ச் சேர்ந்துவிடுவதாக நம்பினுர்கள். இறந்த அம்மன்னர்களுக்காகப் பெரிய கோவில்கள் கட்டப்பட்டன. அங்கு அவர்களுடைய சிலைகளை வைத்து மக்கள் வணங்கி வந்தார்கள். அவர்கள் உண்மையில் அறியாத கடவுளர்களைப் '**பெரிய தெய்வங்கள்**' எனவும், பாரோக்களை '**நல்ல தெய்வங்கள்**' எனவும் அழைத்தனர்.

பாரோ மன்னர்களில் சிறந்தவனுகவும், வரலாற்றுக்குத் தகுதியுடையவர்களாக எகிப்தியர்களை ஆக்குவித்தவனுகவும் விளங்கியவன் **கூபு அல்லது சீயோப்ஸ்** என்னும் பாரோவாவான். எகிப்தில், உலகப் பேரதிசயங்களில் ஒன்ருன பெரிய பிரமிடை கி.மு. 2900ல் கட்டியவனும் இவனே. எகிப்து தனது

ஆட்சியில் சிறந்தோங்கி யிருந்த காலத்தில் பாலஸ்தீனமும், சிரியாவின் பெரும் பகுதியும் பாரோக்களின் ஆட்சியின்கீழ் இருந்தன. பதினுன்காம் நூற்ருண்டில் எகிப்தை ஆண்ட **அமென்ஹோடப்** III என்ற மன்னன் வரலாற்றுச் சிறப்புடைய பல கட்டடங்களைக் கட்டினுன். **லக்சோவ்** (Luxov) என்னுமிடத்தில் கட்டப்பட்ட அற்புதமான கோவில் இவனுல் கட்டப்பட்டதேயாகும். இவனுக்கு அடுத்துப் பட்டத்திற்கு வந்த **அமென்ஹோடப்** IV என்பவனும் எகிப்திய வரலாற்றில் அழியா இடம் பெற்றவனுவான். ஏனெனில் இவன் ஆதி எகிப்தியர்கள் வணங்கிய எல்லாத் தெய்வங்களின் கோவிலையும் அழித்து, சூரிய தேவனுன ஏதேனை மட்டுமே வணங்கும்படியாக அதற்கெனப் பெரிய கோவில் ஒன்றையும் கட்டினுன்.

கி. மு. 1240ல் எகிப்தைச் **சேதீ** I என்பவனும் அவனுடைய மகனுன **ராமேஸீஸ்** II என்பவனும் ஆண்டார்கள் ; கிறிஸ்தவர்களின் வேத நூலான பைபிளில் இஸ்ரேலியர்களின் குழந்தைகளைக் கொன்றவனுகக் கூறப்படும் மன்னன் இவனே. இவன் அற்புதமான பெரிய நகரம் ஒன்றையே **தானிஸ்** என்னுமிடத்தில் கட்டினுன். அங்குக் கட்டப்பட்ட கோவிலின் முன் தொண்ணூறு அடி உயரமுள்ள தனது சிலையையும் வைத்தான். இவன் எகிப்தின் நலனுக்காகப் பல காரியங்களைச் செய்தான். இவனுக்குப் பின்னர் எகிப்தின் ஆட்சி சிறிது சிறிதாகச் சீர்குலைந்து, இறுதியாகப் பாரசீகர்கள் கைக்குப் போய்விடுகிறது. ஆனுல் கி. மு. 332ல் **அலெக்ஸாண்டர்** என்னும் கிரேக்க மாவீரனுல் எகிப்து வெற்றி கொள்ளப்பட்டு, அதன்பின் அவனது தளகர்த்தனுன **பிட்டோல்மி** என்பவனுலும், அவனது வமிசத்தாராலும் முந்நூறு ஆண்டுகளுக்கு மேல்

ஆளப்பட்டது. அவனது வமிசத்தில் இறுதியாக எகிப்தை ஆண்டவள் **கிளியோபாட்ரா** என்னும் புகழ் பெற்ற பேரரசி ஆவாள். அவளுக்குப் பின்னர் உரோமானியர்கள் எகிப்தைக் கைப்பற்றினர்.

எகிப்தியர்கள் தங்கள் கோவில்களை நெடுங் காலம் நிலைத்து நிற்கக்கூடியனவாக அமைத்தார் கள். அவற்றை அழகுபடுத்தவும், உறுதியாக அமைக்கவும் மிகுந்த சிரத்தை செலுத்தினர்கள். ஆனல் அரசனுடைய அரண்மனைகளைக் கட்டுவ தில் அவர்கள் அதிக அக்கரை செலுத்தவில்லை. ஏனெனில், புதிய மன்னன் பழைய மன்னனின் அரண்மனையில் பொதுவாக வாழவில்லை. இவ்வாறு எகிப்தில் இருந்த அற்புதமானவற்றின் அழிவுகளை இன்னும் அங்குக் காணலாம். அவற்றில் மிகவும் அற்புதமானவை பிரமிடுகளும், ஸ்பிங்சுகளுமே யாகும். எகிப்தின் பழைய தலைநகரம் **மெம்பிஸ்** (Mempis) என்பதாகும். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்ச் சிறப்போடிருந்த அந்தப் பட்டணத்தின் அழிவுகளை நாம் இன்றும் காண முடியும். அழிந்து போன கோவில்களும், அரண்மனைகளும், பெரிய வீடுகளும் அங்கு அந்நகரம் எத்துணைச் சிறப்போடு இருந்ததென்பதை அறிவுறுத்துகிறது. அங்கே யிருந்த **ராமேஸீஸ் II** என்பவனுடைய சிலையும் இன்று நிலத்தில் வீழ்ந்து போயிருக்கிறது.

எகிப்தியர்களுக்குச் சிறப்பைத் தருவது அவர் களால் கட்டப்பட்ட அழகு மிக்க மிகப் பெரிய கோவில்களேயாகும். கிருஸ்துவின் காலத்தில் **டேன் டேரா** என்னுமிடத்தில் **ஹாதோர்** என்னும் தேவ தைக்காகக் கட்டப்பட்ட கோவில் தற்காலத்தில் சிதைந்த நிலையில் காணப்பட்டாலும், அதன் சிறப் புக்கள் அழியவில்லை. ஐம்பதடிக்கு மேலாக அமைந் துள்ள தூண்களில் அழகான வண்ணச் சித்தி

ரங்கள் வரையப்பட்டும், அற்புதமான உருவங்கள் செதுக்கப்பட்டும் உள்ளன. வெளிப்புறச் சுவரில் எகிப்தையாண்ட வரலாற்றில் புகழ்பெற்ற கிளியோ பாட்ரா அரசியின் உருவச்சிலை சாதாரண மனித னின் உருவத்தைவிட மும்மடங்கு பெரியதாகச் செதுக்கப்பட்டுள்ளது.

தேபஸ் என்னுமிடத்தில் கட்டப்பட்டிருந்த **அம்மோன் தேவனின்** கோவிலும் மிகச் சிறப்பு வாய்ந்த தாகும். அக்கோவிலைக் கட்டி முடிக்க நானூறு ஆண்டுகளுக்கு மேல் ஆயிற்றும். அதில் அமைந் துள்ள பெரிய தூண்களும், பெரிய பெரிய கற்களை வைத்துக் கட்டப்பட்டுள்ள வெளிப்புறச் சுவர்களும் பார்ப்போரை வியப்பிலாழ்த்துமாம். அங்கு அமைக் கப்பட்டுள்ள பெரிய உருவில் உள்ள சிலைகள் அக் கோவிலுக்கே மிக்க சிறப்புத் தருவனவாம். மற்றும் சந்திர தேவனுக்காகக் கட்டப்பட்ட கோவிலும் ராமேஸீஸ் III என்னும் பாரோ மன்னனுக்காகக் கட்டப்பட்ட கோவிலும் சிறப்புடையன. அக் கோவிலின் இருமருங்கிலும் ஸ்பிங்சுகளின் உருவங் கள் வரிசையாகச் செதுக்கப்பட்டு அமைக்கப்பட் டுள்ளன. அமென்ஹோடப் III என்னும் பாரோ மன்னனுக்காகக் கட்டப்பட்ட கோவிலும் மிகச் சிறப் புடையதாக இருந்தது. அவன் காலத்தில் தங்கத் தாலும், வெள்ளியாலும் அக்கோவில் அழகுபட அமைக்கப்பட்டிருந்தது.

1922ஆம் ஆண்டில்தான் பாரோ மன்னர் களும் எகிப்தின் மற்றைய அரசர்களும் புதைக்கப் பட்டிருந்த பள்ளத்தாக்குக் கண்டுபிடிக்கப்பட்டது. அங்கேதான் **ராமேஸீஸ் II**, அமென்ஹோடப் III, **தோத் மேஸ் III** ஆகிய பாரோக்களின் சவக்குழிகள் கண்டு பிடிக்கப்பட்டன. அவற்றில் சில, மிக அற்புத மாக அலங்கரிக்கப்பட்டிருந்தன. அவைகளிலிருந்த

படங்களிலிருந்தும், கல்வெட்டு உருவங்களிலிருந்தும் ஆதி எகிப்தைப் பற்றி நாம் அதிகமாக அறிந்து கொள்ள முடிகிறது.

அக்காலத்தில் இறந்துபோன எகிப்திய மன்னர்களின் உடலை முதலில் தைலப்பதமிடுவார்கள். இதனால் அவ்வுடல் நெடுங்காலம் அழியாமலிருக்கும். அதன் பின்னர்த் துணியால் அவ் உடலை இறுகச் சுற்றி அவ் உடலுக்கெனத் தயாரிக்கப்பட்ட சவப் பெட்டியில் வைப்பார்கள். அந்தச் சவப் பெட்டி மறுபடியும் மரம் அல்லது கல்லினால் செதுக்கப்பட்ட பெட்டியில் வைக்கப்படும். மற்றும் அந்த உடலுடன் பலவிதமான பொருட்களை வைத்து அதைப் புதைத்து விடுவார்கள். இத்தகைய சவக் குழிகளில் தோண்டியெடுக்கப்பட்ட சவங்களிற் சில, கெய்ரோவிலும் இங்கிலாந்திலும் உள்ள பொருட் காட்சிச்சாலைகளில் வைக்கப்பட்டுள்ளன. அவற்றை **மம்மி** என்று அழைக்கிறார்கள். எகிப்தின் வரலாற்றை இச் சவக் குழிகளிலிருந்து கிடைத்த பொருட்களிலிருந்துதான் நாம் அறிகிறோம்.

**ஸ்பிங்சும் பிரமிடுகளும் :**

எகிப்தில் காணப்படும் பிரமிடுகளுள் மூன்று மிகப் பெரியவை. அவைகளன்றிப் பல சிறிய பிரமிடுகளும் உள்ளன. ஸ்பிங்ஸ் என்பது பெண்ணின் தலையும் சிங்கத்தின் உடலும் கொண்ட எகிப்திய கற்சிலை. எகிப்தில் வழங்கும் புராணக் கதைகளுக்கொப்ப இது முதலில் ஆப்ரிக்காவில் வாழ்ந்த தென்றும், பின்னர் அங்கிருந்து எகிப்தை ஆண்ட மன்னர்களின் கொடுங்கோன்மையை அழிக்கக் கடவுளால் அனுப்பப்பட்டது எனவும் தெரிகிறது. இதைப் பற்றிச் சுவையான கதை ஒன்றும் வழங்குகிறது. ஸ்பிங்ஸ், எகிப்திலுள்ள தேவஸ் நகரின் அண்மையில் ஒரு பாதையின் மீது அமர்ந்த வண்

ணம் வழியில் போவோர் வருவோரிடமெல்லாம் ஒரு விடுகதை போட்டதாம். காலையில் நான்கு கால்களாலும், மதியத்தில் இரண்டு கால்களாலும், மாலையில் மூன்று கால்களாலும் நடப்பது எது? என்பதே அது போட்ட விடுகதை. அதற்குப் பதில் அளிக்காதவர்களையெல்லாம் அது விழுங்கிவிட்டது. கடைசியில் **ஓடிபஸ்** என்பவன் அதற்கு விடை 'மனிதன்' எனக் கூறி விளக்கமும் கொடுத்தானும். அதாவது குழந்தைப் பருவத்தில் இரு கால்களாலும், கைகளாலும் தவழ்ந்து, வாலிபப் பருவத்தில் இரண்டு கால்களால் மட்டும் நடந்து, மீண்டும் முதுமை அடையும் போது கோலின் உதவியால் மூன்று கால்களோடும் நடப்பதால் அது மனிதன் தான் எனக் கூறினனும். அதன் பின்னர் அது கற்சிலையாக மாறிவிட்டதாம். இதனல் ஆதிகாலத்தில் கிரேக்கர்கள் ஸ்பிங்சை மனித இனத்தைப் பீடித்திருந்த ஒரு துன்பம் எனக் கருதினர்கள் எனத் தெரிகிறது. இப்பெயர் முதன் முதலில் கிரேக்கர்களால் வழங்கப்பட்டது.

பிற்காலத்தில் எகிப்திய மன்னர்கள் ஸ்பிங்ஸைத் தங்கள் அரசாங்கச் சின்னமாக வைத்திருந்தார்கள். சிங்கத்தின் உடலமைப்பு அதன் வலிமையையும் கண்ணியத்தையும் காட்டுவதாக அமைந்திருந்தது. பிற்காலத்தில் பெண்ணின் முகத்திற்குப் பதிலாக அந்தந்த அரசர்களின் முகமே அமைக்கப்பட்டது. மற்றும் சிற்சிலவற்றில் ஆட்டின் தலையும், கழுகின் தலையும் அமைக்கப்பட்டன. அவ்வாறு ஆட்டுத்தலை அமைந்த ஸ்பிங்ஸ் அவர்களின் கடவுளான அமோனையும், கழுகுத் தலை அமைந்த ஸ்பிங்ஸ் வீரமுடைய தங்கள் மன்னர்களையும் குறிப்பதாக எண்ணினர்கள்.

கீஸே (Gizeh) என்னுமிடத்திலுள்ள பெரிய ஸ்பிங்ஸ்தான் எல்லாவற்றிலும் சிறந்ததாகும். பல

நூற்ருண்டுகள் இது பயங்கரமான இரகசியம் உடையதாகக் கருதப்பட்டு வந்தது. அராபியர்கள் தங்கள் மதத்தை எகிப்தில் பரப்பியபோது இதைப் பெரும்பாலும் அழித்துவிட்டார்கள். அத்தகைய கொடூரமான செயலுக்கு ஆட்பட்ட பின்னரும் இது இன்றளவும் அழகுறக் காட்சியளிக்கிறது.

கர்நாக் என்னுமிடத்தில் ஸ்பிங்சுகள் வரிசை வரிசையாக நெடுந்தூரம் அமைக்கப்பட்டுள்ளன. அவைகளிற் சில முன்பு கூறியதுபோல ஆட்டுத்தலே உடையனவாகவும், சில கீஸே என்னும் இடத்தில் காணப்படும் ஸ்பிங்ஸைப் போலவும் உள்ளன. இவை மிக்க அழகுற அமைக்கப்பட்டிருப்பதோடு, காலத்தாலும், இயற்கையாலும் அழிவுருமல் நிலேத்துள்ளன. இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ள ஸ்பிங்சுகளிலேயே மிக அழகானது எகிப்தின் பழம் நகரமான மெம்பிசுக்கு அண்மையில் கண்டு பிடிக்கப்பட்டதாகும். அதன் முகத்திலுள்ள அரச சாயலும், கம்பீரமும் வியத்தற்குரிய வகையில் அமைந்துள்ளன.

## பிரமிடுகள் :

பிரமிடுகள் இறந்தவரைப் பெருமைப் படுத்துவதற்காக ஆதிநாளில் எகிப்தியர்களால் கட்டப்பட்டன. வரலாற்றுக் காலத்திற்கு முன் மக்கள் இறந்தவர்களேப் புதைத்த இடத்தில் கம்பங்கள் நட்டும், கல் நட்டும் அடையாளம் செய்தார்கள். பிற்காலத்தில் இவை நினைவுச் சின்னங்களாகப் பெரிய பிரமிடுகளே கட்டுமளவுக்கு மாறியது. நாம் நினைப்பதுபோல் பிரமிடுகளின் மத்தியில் சவங்கள் வைக்கப்படவில்லே. அவை நிலத்தினடியிலேயே அழகாகக் குழிதோண்டி வைக்கப்பட்டன. பிரமிடுகள் எகிப்து நாட்டிற்கு மிகவும் புகழைத் தரக்கூடியவை.

அவற்றில் சில, அரசர்களுக்காகவும், சில, அரசி களுக்காகவும், சில, முக்கியமான பெரிய மனிதர் களுக்காகவும் கட்டப்பட்டன. இவற்றில் எல்லாம் மிகவும் பழைமையானதும், வியப்பைத் தருவதும் **ஜோஸர்** மன்னனுக்காகக் கட்டப்பட்டதேயாகும். இது ஆருயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாகும், மற்ரெரு மிகப் பழைமையான பிரமிடு மேடம் என்னு மிடத்திலுள்ள **சினேபேருவின்** பிரமிடாகும்.

பிரமிடுகளில் சில செங்கற்களால் கட்டப்பட்டி ருந்தாலும் அவை பெரும்பாலும் கருங்கற்களாலேயே கட்டப்பட்டுள்ளன. இவை உருவத்தில் சிறியவை யும் பெரியவையுமாகக் காணப்படுகின்றன. செங் கற்களால் கட்டப்பட்டுள்ளவை கற்களால் கட்டப் பட்டுள்ளவை போல அவ்வளவு பெரியன அல்ல. அதுவுமன்றி, அவை பிற்காலத்தில் கட்டப்பட் டவை ஆகும்.

கூபு மன்னனுக்காகக் கட்டப்பட்ட பிரமிடு ‘பெரிய பிரமிடு’ என்று அழைக்கப்படுகிறது. தொலே விலிருந்து காண்பதற்கு அதன் பக்கங்கள் ஒழுங் கானவை போல் காணப்பட்டாலும் அண்மையில் சென்று காணின் அவை ஒழுங்கின்றி அமைந்திருப் பது தெரியும். அதில் அமைக்கப்பட்டுள்ள கற்கள் ஓர் ஆளேவிட உயரமானவையாகவும், பல டன்கள் எடையுள்ளவையாகவும் இருக்கின்றன. இவ்வாறு கிட்டத்தட்ட இருபது இலட்சம் கற்கள் அடுக்கப் பட்டுள்ளன. இத்தகைய கற்கள் நைல் நதி வழி யாகப் படகில் கொண்டுவரப்பட்டன என்பதை நாம் அறியும்போது வியப்படையாமலிருக்க முடி யாது. அவைகளே ஒன்றின் மீது ஒன்ருக உருளே களின் உதவியால் அடுக்குவது அவ்வளவு எளிதான காரியமன்று. இத்தகைய அரிய செயலேச் செய்த அம்மக்களின் பொறி இயல் அறிவை நாம்

பாராட்டாமலிருக்க முடியாது. பெரிய பிரமிடின் பக்கம் எழுநூற்று ஐம்பத்தைந்து அடி. உயரம் நானூற்றைம்பத்தோர் அடி.

பிரமிடுகளின் அடியிலேயே சவக் குழிகள் அமைக்கப்பட்டன என்று சொன்ேனும். பெரிய பிரமிடிலும் அவ்வாறே அமைக்கப்பட்டிருந்தாலும் அது முடிவுபெறவில்லே. பெரிய பிரமிடின் வடக்கு வாயில் வழியாகச் சென்ருல் அதனுள்ளே உள்ள பெரிய கூடத்தை அடையப் படிகளின் வழியாக நாம் சிறிது தூரம் ஏறவேண்டியிருக்கும். அங்கிருந்து தெற்கே திரும்பிச் சென்ருல், அரசியின் கூடம் என்றழைக்கப்படும் இடத்தை அடைவோம். அவ்வாறின்றி நாம் தொடர்ந்து செல்வோமாயின் அரசனின் கூடத்தை ஒட்டிய கூடத்தையும், பின்னர் அரசனின் கூடத்தையும் அடைவோம். அதனுள் கருங்கல்லில் செதுக்கப்பட்டு அமைக்கப்பட்டுள்ள சவப்பெட்டி உள்ளது. ஆனுல் அதனுள் காணப்படும் பொருட்கள் சிலவே. மற்றப் பொருட்கள் சவக்குழியிலுள்ள பொருட்களேக் கொள்ளேயடிப்பவரின் கூட்டத்தர்ரால் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கொள்ளேயடிக்கப்பட்டுவிட்டன. அரசனின் கூடத்திற்கு வெளிக்காற்று வர வழிகள் அமைக்கப்பட்டிருப்பது பெரிய பிரமிடின் மற்ரெரு பெரு வியப்பைத் தரும் செய்தியாகும்.

எனவே எகிப்தின் வரலாற்றையும் சிறப்பையும் உலகுக்குப் பறைசாற்றி நிற்கும் இப்பிரமிடுகளேயும், ஸ்பிங்ஸையும் அமைத்த அக்கால மக்களின் கலேத் திறனேயும், கற்பனேத்திறனேயும் என்னென்பது! அவற்ருலன்ரே எகிப்தின் பழங்கால நாகரிகமும், வரலாறும் அழியாமற் பாதுகாக்கப்பட்டன!

பழங்காலத்தில் எகிப்திய மக்களின் வாழ்க்கை மிகவும் நல்ல நிலையில் இருந்தது. அக்காலத்தில் வீடுகள் மண்ணால் கட்டப்பட்டிருந்தன. மண் ஜாடி களில் எண்ணெயையும், நீரையும் வைத்திருந்தனர். ஒவ்வொரு வீட்டிலும் ஒரு கடவுளின் சிலை இருந்தது. அவர்கள் தானியத்தை அரைத்து, ரொட்டி செய்யக் கற்றிருந்தனர் ; ஆடைகள் நெய்யவும் கற்றிருந்த னர். தொழிலாளர்கள் காலையில் வேலைக்குச் செல் லும்போதே, தங்களுக்குத் தேவையான மதிய உண வையும் எடுத்துச் சென்றனர். உலோக வேலையி லும், மரவேலையிலும் சிறந்த தொழிலாளர்கள் இருந் தனர். வியாபாரம் பெரும்பாலும் பண்டமாற்று முறையிலேயே நடைபெற்று வந்தது.

தனவந்தர்கள் பெரிய மாளிகைகளில் வாழ்ந் தனர். அவை இரண்டு அல்லது மூன்று அடுக்கு களைக் கொண்டவையாக இருந்தன. வீட்டுச் சுவர் களில் அழகிய சித்திரங்கள் வரையப்பட்டு இருந் தன. எளிய மக்களைவிட அவர்கள் சிறந்த உண வையே உட்கொண்டனர்.

பழங்கால எகிப்தில் நன்கு பயின்ற படைவீரர் கள் இருந்தனர். குதிரை பூட்டிய இரதங்கள் போர்க்காலங்களில் பயன்படுத்தப்பட்டன. மன்னர் கள் பெரும்பாலும் இத்தகைய இரதங்களிலேயே சவாரி செய்தார்கள். அமைதியான காலங்களில் போர் வீரர்கள் விவசாயிகளாகவும் உழைத்தனர்.

எகிப்தியர்கள் மருத்துவக்கலையையும் அறிந் திருந்தார்கள். ஆனால் அவர்கள் நோய்கள் பெரும் பாலும் பேய், பிசாசுகளாலேயே உண்டாக்கப்படு கின்றன என்று நம்பினார்கள் ; அதற்கான மருத்துவ மும் செய்தார்கள். அக்காலத்திலிருந்த மருத்துவ னுக்கு, நோய்களைப் பற்றியும், மருந்தைப் பற்றியும்

அதிகமாகத் தெரியாது. எனவே பேய் பிசாசுகள் ஓட்டுவதற்காகக் கொடிய முறைகளில் வைத்தியம் செய்தார்கள்.

குழந்தைகள் அதிக அக்கரையுடன் வளர்க்கப் பட்டார்கள். குழந்தைக்கு நான்கு ஆண்டுகள் முடியும் வரையும் தாய் பராமரிப்பில் வைத்திருப்பார்கள். நான்கு ஆண்டுகள் முடிந்தபின்னர்க் குழந்தையைக் கல்விச்சாலேக்கு அனுப்புவார்கள். அவ்வாறு பள்ளிக்குச் சென்ற குழந்தை எழுதவும் படிக்கவும் கற்கவேண்டும். ஆனுல் அது அவ்வளவு எளிதான தன்று. எழுத்துக்களைப் பன்முறை எழுதிப் பழக வேண்டும். ஏனெனில் அவை சித்திர வடிவில் இருந்தன. இவ்வாறு சித்திரவடிவமான எழுத்துக் களைக் கற்கச் சில ஆண்டுகளாவது ஆகும். பின்னர் ஆசிரியர் மாணவனின் எழுத்துத் திறமையில் திருப்தி அடைந்தபின்னர் பழங்காலத்தில் ஏற் கெனவே எழுதப்பட்ட நூல்களின் பகுதியைக் கொடுத்து அவற்றை எழுதிப்படிக்கச் செய்வார். இதனுல் மாணவர்களுக்கு நல்ல கையெழுத்துப் படிவதுடன், பிழையின்றி எழுதவும் கற்கிருர்கள். பழம் நூல்களில் காணப்படும் அரிய கருத்துக்கள் தாமாகவே அவர்கள் உள்ளங்களில் படிகின்றன. அவ்வாறு பழம் நூல்களிலிருந்து கொடுக்கப்பட்ட பகுதிகள், உரை நடையாகவும், செய்யுளாகவும் இருந்தன. ஆதி எகிப்தியர்கள் தேவதைக் கதைகளில் மிக்க ஆர்வமுடையவர்களாக இருந்ததால் அத்தகைய கதைகளும் கற்பிக்கப்பட்டன. அக்காலத்திலேயே மாணவர்களுக்கு நல்ல அறிவுப் போதனைகளும், பழக்க வழக்கங்களும், பெரியோர்களிடம் மரியாதையாக நடந்துகொள்ளும் முறையும் கற்பிக்கப்பட்டன. துவக்கநிலேக் கல்வியின் போதே வாழ்க்கையை ஒட்டிய கணிதமும் கற்பிக்கப்பட்டது.

சாதாரணக் குடிமகனுக அக்காலத்தில் வாழுவதற்கு இக்கல்வியறிவு போதுமானதாய் இருந்தது.

ஆனுல் அரசாங்க அலுவல்களில் அமரவோ, அல்லது படைத்தலைவனுக இருக்கவோ, பெரிய வர்த்தகர்களிடத்தில் கணக்கராக இருக்கவோ மேலும் அதிகமான கல்வி கற்ருக வேண்டியிருந்தது. எனவே அந்தந்தத் தொழிலுக்குத் தனியான கல்வி அளிக்கப்பட்டது. ஒருவன் படைத்தலைவனுக விரும்பினுல், படைத்தலைவர்களைப் பயிற்றுவிக்க அரசன் மேற்பார்வையில் உள்ள கல்விச் சாலைக்குச் செல்ல வேண்டும். மதகுருவாக விரும்பினுல் கோவில்களின் கீழ்க் குருக்களின் மேற்பார்வையில் இருந்த கல்விச்சாலைக்குச் சென்று பயிலவேண்டும். எகிப்தில் எத்தகைய கல்வி கற்பிக்கப்பட்டு, எந்நிலையை அடைந்தாலும் தன்னைவிட உயர்ந்தவர்களுக்கும், பெரியோருக்கும் மரியாதை எங்ஙனம் செய்யப்பட வேண்டும் என்பதில் அதிக அக்கரை காட்டினுர்கள். அவ்வாறு மரியாதை செய்யத் தகுந்தவர்கள் பெற்ருேர்கள், ஆசிரியர்கள், மன்னன், குருக்கள், கற்றறிந்த மூத்தோர், அறிஞர் முதலானுேர்.

ஓர் எகிப்தியன் தன் மகனுக்கு எழுதிய கடிதம் ஒன்று கீழே கொடுக்கப்பட்டுள்ளது. அதை ஊன்றிப் படியுங்கள்.

“உனக்கு உன்தாய் என்னென்ன செய்திருக்கிருள், செய்கிருள் என்பதை மறந்துவிடாதே. அவள் உன்னைப் பெற்றெடுத்து, போற்றிக் காப்பாற்றி, உன்னை மனிதனுக ஆக்குவித்தாள். நீ கல்விச்சாலைக்குச் சென்றபொழுது அவள் உனக்காக ரொட்டியும், நீரும் அங்கே சுமந்து வந்தாள். அத்தகைய உன் தாயை நீ மறந்துவிட்டால் அவள் குறைசொல்லுவாள்; கடவுளர்களிடத்தில் உன்னைப்

பற்றி முறையிடுவாள். கடவுளர்களும் அதற்குச் செவி சாய்ப்பர்'."

இக் கடிதத்திலிருந்து தாயை எப்படிப் போற்ற வேண்டுமென்பதும், எவ்வாறு மரியாதை செய்ய வேண்டுமென்பதும் அறியப்படுகிறதல்லவா ?

எகிப்தியரின் நூல்கள் :

ஆதி எகிப்தியர்கள் தங்கள் எண்ணங்களையும், வரலாற்றையும் புத்தகங்களாக எழுதி வைத்திருக்கிருர்கள். இதனுல் அவர்கள் பழங்காலத்திலேயே எழுதவும் கற்றிருந்தார்கள் என்பது தெரிகிறது. உலகிலேயே மிகப் பழமையானதென்று கருதப்படுவதும் எகிப்தியரின் ஒரு நூலே. அது ஒரு தந்தை தன் மகனுக்கு அரிய புத்திமதிகளைக் கூறுவதாக அமைந்துள்ளது. அக்காலத்தில் எகிப்தியரால் எழுதப்பட்ட நூல்கள் அமைப்பில் இக்கால நூல்களைப் போலில்லை. நூல்களை எழுத விரும்பும் எகிப்தியர் ஒருவகை நாணலின் தண்டைச் சேகரிப்பர். அந்த நாணல் பன்னிரண்டு முதல் பதினைந்து அடி வரைவளரும்தன்மையது. அதன் அடித்தண்டுசுமார் ஆறு அங்குலக் கனமுள்ளது. அதன் மேற்பகுதியை உரித்தபின்னர் இடைப்பகுதியைக் கூர்மையான கத்திகளைக் கொண்டு இலேசானவைகளாகக் கிழிப்பர். பின்னர் அவை ஒன்ருேடு ஒன்று இணைக்கப்படும். நமக்குப் பனை ஓலை ஏடுகளைப்பற்றித் தெரியும். நன்கு அவை சீவப்பட்டு அவற்றின் ஓரத்தில் துளையிட்டு அவற்றை இணைப்பர். ஆயின் எகிப்தியரின் ஏடுகள் அவ்வாறின்றி ஒன்ருேடு ஒன்று வரிசையாக நீள இணைக்கப்பட்டன. அதன் பின்னர் அவற்றின் மீது ஒருவிதப் பசையைத் தடவிக் குறுக்கு வாட்டில் மறுபடியும் அந்த நாணலின் இலேசான தண்டுகளை ஒட்டவைப்பர். பிறகு அவற்றை அழுத்தி இலே

சானதாக ஆக்குவார். அது கிட்டத்தட்ட இக்காலத்தில் காகிதம் கையால் செய்யப்படும் முறையை ஒத்திருந்தது. அக்காலத்தில் அவ்வாறு செய்யப்பட்ட தாளின் நீளம் பதினெட்டு அங்குலங்கள் வரை இருந்தது.

இவ்வாறு செய்யப்பட்ட காகிதத்தின்மீது எழுதி அதைச் சுருட்டி விடுவார்கள். எனவே அவற்றைப் புத்தகச் சுருள்கள் என்று சொல்வது மிகவும் பொருத்தமானதாகும். அத்தகைய புத்தகச் சுருளில் ஒன்று பிரிட்டனில் உள்ள பொருட்காட்சிச் சாலையில் உள்ளது. அச்சுருளின் நீளம் நூற்றுமுப்பத்தைந்து அடிகள். எனவே எகிப்தியர்கள் நூல்களை அமைத்த முறை விந்தையானது போல, அவர்கள் எழுதிய முறையும் விந்தையானதே. அவர்கள் எழுத்துக்கள் சித்திரவடிவில் அமைந்திருந்தன. அவர்கள் எதை எழுதவேண்டுமென்று எண்ணுவார்களோ அதைக் குறிக்கும் சித்திரத்தை மட்டும் எழுதினார்கள். இவ்வாறு எழுதப்பட்ட அவர்கள் நூலைக் கண்ணுற்றால், அவை வரிசை வரிசையாக அமைக்கப்பட்ட பறவைகள், மிருகங்கள், மனிதர்கள் இவற்றின் சித்திரங்களே காட்சியளிக்கும். இவற்றைக் கொண்டு படித்து, அவர்கள் அதில் எழுதப்பட்டிருந்தவற்றை அறிந்தார்கள். இவை நெடுங்காலம் நிலைத்து நில்லாதன வாகையால், நெடுங்காலம் நிலைத்து நிற்கவேண்டிய செய்திகளை இம்முறையில் கற்களில் செதுக்கினார்கள்.

இவ்வாறு அவர்கள் நூலெழுதுவதாயின் ஒரு வகையான தூரிகையையும், பல்வகையான வண்ணங்களையும் பயன்படுத்தி எழுதினார்கள். ஒவ்வொரு வண்ணமும் அந்தந்தச் செய்தியின் முக்கியத்துவத்திற்கொப்பப் பயன்படுத்தப்பட்டது. இம்முறையிலேயே எகிப்தியர்கள் பல்வேறு வித நூல்

களை எழுதினர். அவை மதத்தைப் பற்றியும், மன்னர்களைப் பற்றியும், புராணக் கதைகளைப்பற்றியும், எழுதப்பட்டன. பெரும்பான்மையான புத்தகங்கள் கடவுளர்களைப் பற்றியும், மதத்தைப் பற்றியுமே எழுதப்பட்டன. இவை அவர்களால் "நீத்தார் நூல்" என்று அழைக்கப்பட்டன. தற்காலத்தில் சிலர் அவற்றை "எகிப்தியர்களின் விவிலிய நூல்" என்று கூறுகின்றனர். உண்மையில் இப்பெயர்களில் எவையும் அவற்றிற்குப் பொருத்தமானவை அல்ல. உண்மையில் "ஒளியில் காணும் வருங்கால விளக்கம்" என்று அவற்றை அழைப்பதே பொருத்தமான தாகும். ஏனெனில் எகிப்தியர்கள், இறந்துபோன தங்கள் மூதாதையர்கள் அந்நூலில் எழுதப்பட்டுள்ள எல்லா அறிவுரைகளையும் அறிவார்களானல் அவர்கள் நரகத்திற்குப் போவதிலிருந்தும் தப்பிச் சொர்க்கத்திற்குச் சென்று அங்குள்ள இன்பங்களை அனுபவிக்க அந்நூல் பயன்படும் என நம்பினுர்கள்.

அத்தகைய நூல்களில் பாம்புகள், இராட்சசமிருகங்கள் ஆகியவற்றை வசப்படுத்தும் மந்திரங்களும், மற்றும் நரகத்திலிருந்து தப்புவதற்கான மந்திரங்களும் சொல்லப்பட்டிருந்ததோடு, அவற்றின் இறுதியில் அந்நூல் எவர்க்குப் பயன்படுவதற்காக எழுதப்பட்டதோ அவர் இறந்த உடன் அவர் பெயரையும் எழுதுவதற்காக இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. பின்னர் அந்நூல் அச் சவத்துடனேயே புதைக்கப்பட்டது. இதனுல் அவ்விறந்த மனிதர் பேய் பிசாசுகளினின்று தப்பிச் சொர்க்கத்திற்குச் செல்வதாக அவர்கள் நம்பினர். ஆனுல் இவ்வாறு எழுதப்பட்ட நூல்கள் அதிக அக்கரையுடன் எழுதப்படவில்லை. ஏனெனில் அவை சவத்துடன் புதைக்கப்படுவதால் அவை பின்னர்ப் பயனற்றவையாகின்றன என்பதால்தான். இவற்ருல் ஆதி எகிப்தியர்கள் நூல்களை

எவ்வாறு அமைத்தனர் என்பதையும், பழங்காலத்தில் அவர்கள் கொண்டிருந்த மூடப் பழக்க வழக்கங்கள் பற்றியும் நாம் அறிகிறோம்.

## எகிப்தியரின் பழங்காலக் கொள்கைகள் :

எகிப்தியர்கள் மனிதன் இறந்த பின்னும், அவன் உயிர் அவ்வுடலை நாடி வருகிறது என்பதை நம்பியது போலவே, சொர்க்கத்திலும் அவர்களுக்கு நம்பிக்கை இருந்தது. சொர்க்கத்தைப்பற்றி அவர்கள் வேடிக்கையானதும், விந்தையானதுமான நம்பிக்கையைக் கொண்டிருந்தார்கள். நீலவானம்இரும்புத்தகட்டைப்போலான ஒரு பரப்பு எனவும், அதன் நாற்றிசைகளிலும் மலைமுகடுகள் அதைத் தாங்கி நிற்பதாகவும் அவர்கள் நம்பினார்கள். நட்சத்திரங்கள் சிறு விளக்குகளைப்போல இவற்றிலிருந்து தொங்குவதாக எண்ணினார்கள். உலகைச்சுற்றி வானுறை நதி ஓடுவதாகவும், சூரியன் அதில் மிதந்து ஒளி கொடுப்பதாகவும், பின்னர் அது அந்த ஆற்றிலேயே சென்று மலைக்குப் பின்னால் மறைந்து விடுவதாகவும், அதன் பின்னர்ச் சந்திரன் அவ்வாறே தோன்றி மறைவதாகவும் எண்ணினார்கள்.

கடவுளர்களைப் பற்றி அவர்களுடைய கொள்கைகள் என்ன என்பதை அறுதியிட்டுச் சொல்வதற்கில்லை. ஏனெனில் அவர்கள் பல கடவுள்களை வணங்கிவந்தார்கள். ஆனால் பொதுவாக அவர்கள் மதம் சொர்க்கவாழ்க்கையைப்பற்றியும், அதை அடைவதற்குரிய வழிகளைப்பற்றியுமே கூறுவதோடு கடவுளர்களைப் பற்றின தெளிவான கொள்கைகளைக் கூறவில்லை. மனிதன் இறந்த உடன் அவன் உயிர், மேல் உலகத்திற்குச் செல்கிறது எனவும், அங்கே உண்மையை விசாரித்து, நீதிவழங்குமிடத்தில் அதற்குத் தீர்ப்பு வழங்கப்படுகிறது எனவும் நம்பினார்கள்.

ஆனல் அந்த இடத்தை அடைவதற்கு அதற்குரிய மந்திரங்களை அந்த உயிர் அறிந்திருக்க வேண்டு மாம். அவ்வாறு தீர்ப்பு வழங்குவதற்கு நாற்பத் திரண்டு பயங்கர உயிரினங்கள் இருக்குமாம். இறந்து போனவரின் பாவ புண்ணியங்களை ஒப் பிட்டு, இறுதியாகப் பாவங்களுக்குப் பரிகாரம் செய்த பின் அவருடைய இருதயத்தை எடுத்து இறகாலா கிய துலாக்கோலில் எடையிட்டுச் சரியான அள விருப்பின் மோட்சமும், இல்லையேல் நரகமும் வழங் கப்படுமாம்.

எனவே எகிப்தியர்கள் எதைச் சொர்க்கம் என எண்ணினர்கள் ? சொர்க்கத்தைப்பற்றிப் பல்வேறு அபிப்பிராயங்களைக் கொண்டிருந்தனர். சொர்க்கத் தில் அனுமதிக்கப்பட்ட உயிர் அங்கேயே நட்சத்திர மாக மாறி ஒளிவீசும் எனவும், அல்லது ஓர் அற்புத மான இடத்திற்கு அவ் உயிர் எடுத்துச் செல்லப் பட்டு அது அங்கேயே அழியாமல் இன்பமாக வாழ்ந்துவரும் எனவும் நம்பினர்கள்.

**தற்காலத்தில் எகிப்தில் மக்கள் வாழ்க்கை :**

இதுவரை பழங்காலத்தில் எகிப்து எத்தகைய நாகரிகம் பெற்றிருந்தது எனவும், மக்கள் வாழ்க்கை முறை, கல்வி, மதம் ஆகியவற்றைப் பற்றியும் தெரிந்துகொண்டோம். இனித் தற்காலத்தில் எகிப் தின் நிலையைப்பற்றி நாம் அறிவது, வழிவழியாக நாகரிகத்தோடு வாழ்ந்த அந்த மக்கள் தற்காலத் தில் எப்படி இருக்கிருர்கள் என்பதை அறிய உறு துணையாக இருக்கும்.

ஏனைய நாடுகளைப் போலவே எகிப்தும் பழங் காலத்திலிருந்து பல படையெடுப்புக்களால் அவதி யுற்றது. ஆருயிரம் ஆண்டுகள் வரலாற்றுச் சிறப்

புடைய எகிப்து நாட்டில் இன்றும் அதே நைல்நதி பாய்ந்து வள மூட்டுகிறது. எகிப்து நாடு நைல் நதியின் இருகரைகளையும் ஒட்டி அமைந்திருப்பதை நாம் அதன் படத்தைப் பார்த்து அறிந்துகொள்ள லாம். மத்திய தரைக்கடல், எகிப்தின் வட எல்லை யாகவும், அரேபியப் பாலைவனமும், செங்கடலும் அதன் கிழக்கெல்லையாகவும், சூடன் தென் எல்லை யாகவும், லிபியா பாலைவனம் மேற்கு எல்லையாகவும் அமைந்துள்ளன. நைல்நதி எகிப்து நாட்டில் ஒரு குறுகிய பள்ளத்தாக்கின் வழியாக வடக்கு நோக்கிப் பாய்கிறது. நைல்நதி வெள்ளப்பெருக்கெடுத்தோடும் நாட்களில் ஏராளமான வண்டல் மண்ணைக் கொண்டுவந்து அதன் பள்ளத்தாக்குகளில் படிய வைக்கிறது. அது பின்னர் டெல்டாவாக அமை கிறது. இதற்குக் **கீழ் எகிப்து** என்பது பெயர். நைல் நதியின் குறுகிய பள்ளத்தாக்கு **மேல் எகிப்து** எனப் படுகிறது. எனவே எகிப்தின் மொத்தப் பரப்பில் நைல் நதியால் செழுமையுறுவது அதன் மூன்றில் ஒரு பகுதியே ஆகும். மற்றது மக்கள் வாழ முடி யாத பாலைவனமாகக் காட்சியளிக்கிறது.

கி. மு. 30ல் கிளியோபாட்ராவுக்குப் பின்னர், எகிப்து உரோமானியர்களால் கைப்பற்றப்பட்டது என்று முன்பே பார்த்தோம். உரோமானியர்கள் எகிப்தை எழுநூறு ஆண்டுகளுக்கு மேலாக ஆண்ட னர். அதன் பின்னர் அராபியர்கள் இஸ்லாத்தைப் பரப்புவதற்காக எகிப்தைக் கைப்பற்றினர். எகிப்தின் ஒரு பகுதி அவர்கள் ஆட்சியில் செழித்தோங்கியது. கி. பி. 1517ல் **செலீம்** (Selim) என்னும் மன்னன் சிரியாவையும், பாலஸ்தீனத்தையும் வென்று, பின் னர் எகிப்திலும் தன்னைச் சுல்தான் என்று கூறி, முடி சூட்டிக்கொண்டான். அதன் பின்னர் எகிப்து ஒரு துருக்கிய நாடாகவே ஆளப்பட்டு வந்தது.

அம்மன்னர்கள் ஆட்சியில் எகிப்தில் கொடுங் கோன்மை நிலவியது. ஆனால், கி. பி. 1798ல் **நெப்போலியன்** இந்தியாவை வெல்வதற்காக, எகிப்தை அடித்தளமாக வைத்துக்கொள்ள விரும்பி, எகிப்தைக் கைப்பற்றினான். ஆனால் நெடுநாட்கள் அவன் கையில் எகிப்து இருக்கவில்லை. அதே சமயத்தில் நெப்போலியனுக்கு எதிராகத் துருக்கியர்களுக்கு உதவி செய்துவந்த அல்பானிய முகமத் அலி என்பவன் ஆட்சிக்கு வந்தான். அன்னியப் படைகளை நாட்டைவிட்டுத் துரத்திய பின்னர் தன் படை பலத்தைத் துருக்கியரோடும், மாமுல்குகளோடும் சேர்ந்து பெருக்கினான். இதனால் துருக்கியர்களும் அவனை எகிப்தின் மன்னனாக ஒப்புக்கொண்டனர். ஆனால் அவன் பின்னர் மாமுல்குகளின் நாட்டைக் கொடுமையுடன் கைப்பற்றினான். முகமத் அலி தன் பெரும் படையுடன் சென்று அரேபியா, பாலஸ்தீனம், சிரியா, ஆசியா மைனரின் சில பகுதிகள் ஆகியவற்றை வென்று, தனது ஆட்சியை விரிவு படுத்தினான். அவன் துருக்கியர்களை வெற்றி பெற்றதால் எகிப்தை ஆளும் உரிமை அவன் வழிவந்தவர்களுக்குக் கிடைத்தது. முகமத் அலி வெற்றி பெற்ற தன் புதிய நாட்டை முன்னேற்றுவதற்காக அரும்பாடு பட்டான். ஆனால் அதற்குள்ளாக அவன் இறந்து விட்டான். பின்னர் அவனது பேரனான **இஸ்மாயீல்** என்பவனது காலத்தில் எகிப்து மீண்டும் பெருந்தொல்லைகளுக்கு ஆளாகியது. தன்னுடைய ஆடம்பர வாழ்வின் செலவிற்காகச் சூயஸ்கால்வாயின் பெரும் பங்குகளை அவன் ஆங்கிலேயருக்கு விற்றுவிட்டான். சூயஸ் கால்வாய் மத்திய தரைக் கடலையும், செங்கடலையும் இணைக்கிறதென்பதும், வாணிகத்தில் அது எத்தகைய முக்கிய இடம் பெறுகிறது என்பதையும் நீ அறிவாய்.

கி. பி. 1882ல் எகிப்து அராபியர்களால் மீண்டும் பெருந் தொல்லைக்குள்ளானது. அப்போது அதையாண்ட சுல்தான் அதைச் சீர்திருத்த எவ்வித அக்கரையும் எடுத்துக்கொள்ளாததால், ஆங்கிலேயர்கள் எகிப்தில் முக்கிய இடம் வகிக்க ஆரம்பித்தனர்.

இத்தகைய வரலாற்றுச் சிறப்புடைய மக்களின் வழி வந்தவர்களா இன்றைய எகிப்தில் நிலை பெற்றுள்ளனர்? இக்கேள்விக்கு விடையளிப்பது சற்றுக்கடினமே. ஆயின் அரசர்களும், பிரபுக்களும், மதகுருக்களும் மறைந்து சாதாரண விவசாயிகள் மட்டுமே நிலைத்து நின்றனர். அத்தகைய விவசாயிகளும் கிட்டதட்ட அடிமைகளாகவே இருந்தனர். நாளடைவில் அவர்கள் நாடு செழிப்படையச்செழிப்படைய அவர்களும் அடிமைத் தளையினின்றும் நீங்கினர். இன்று எகிப்தில் வாழும் மக்கள் தொகை ஏறத்தாழ இரண்டு கோடி. அவர்களில் பெரும்பாலோர் விவசாயிகளே. சில ஆதி குடிகளும் இன்று எகிப்தின் சில பகுதிகளில் வாழுகிறார்கள். ஆனால் அவர்கள் ஏனைய மக்களைப்போலச் செல்வச் செழிப்பும், தற்கால நாகரிகமும் உடையவர்களாக இல்லை.

எகிப்தில் பதினாரும் நூற்றாண்டிலேயே கிறிஸ்தவ மதம் பரவத் தொடங்கியது ஆனால் 17ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில் முஸ்லிம்கள் எகிப்தின் மீது படையெடுத்தபோது, பெரும்பாலோரான எகிப்தியர்கள் இஸ்லாமியர்கள் ஆனார்கள். மற்றுமுள்ள கிறிஸ்தவர்கள் தனியாகப்பிரிந்தனர். அவர்களுக்குக் காப்ட்ஸ் என்பது பெயர். இன்றைக்கு அவர்களில் பெரும்பாலோர் சிறந்த பொன் வேலைக்காரர்களாகவும், கடியாரங்கள் செய்பவர்களாகவும், துணி தைப்பவர்களாகவும் இருக்கிறார்கள். இம்மக்கள் நகரங்

களிலேயே வாழுகின்றனர். முஸ்லிம்களைப் போலன்றி, இக்கிறித்தவ மக்கள் ஒரே ஒரு மனைவியை மட்டும் உடையவர்களாக இருக்கின்றனர். இப்பெண்கள் முஸ்லிம் பெண்களைப் போல, வீட்டிலேயே அடைந்து கிடக்காமல் வெளி வேலைகளையும் கவனிக்கின்றனர்.

எகிப்தின் பெரும்பகுதியில் தற்போது இரயில் பாதை அமைக்கப்பட்டுவிட்டது. ஆயினும் இன்றளவும் எகிப்தியர்களின் பிரதான போக்குவரவு மார்க்கமாக நைல் நதியே இருந்து வருகிறது. விவசாயிகள் நைல் ஆற்றின் நீரையே பாசனத்திற்குப் பயன்படுத்துகின்றனர். எகிப்தின் முக்கிய விளை பொருட்கள் **பஞ்சு, கரும்பு, தானியங்கள்** முதலியன. **சர்க்கரை** செய்யும் தொழில் எகிப்தில் சிறப்பாக நடைபெறுகிறது. பஞ்சு, அயல்நாடுகளுக்கு ஏராளமாக ஏற்றுமதி செய்யப்படுகிறது.

ஓரத்தில் கரும்பைத் துண்டு துண்டாக வெட்டிச் சாலைகளில் தின்பதற்காக விற்பதை நம் நாட்டில் சாதாரணமாகக் காண்பதுபோல் எகிப்திலும் காணலாம். பழத்தோட்டங்களும் எகிப்தில் ஏராளமாக உள்ளன.

**கிராம மக்களும், வாழ்க்கையும் :**

எகிப்து நாடெங்கிலும் கிராமங்கள் பரந்து கிடக்கின்றன. வெள்ளை வெளேரென்ற மசூதிகளின் சிகரங்கள் அக்கிராமத்தின் எப்பகுதியிலிருந்து பார்த்தாலும் தெரியும்படி இருக்கும். மக்கள் சாதாரணமாக மண் அல்லது செங்கற்களால் ஆகிய வீடுகளிலேயே வசிக்கிறார்கள். ஒவ்வொரு வீட்டிலும் ஒன்று அல்லது இரண்டு அறைகள் மட்டுமே இருப்பதோடு வெளியில் ஒரு முற்றமும் அமைக்கப்பட்டிருக்கும். பெரும்பாலும் முற்றத்திலேயே சமையல் வேலை

நடைபெறும். அவர்கள் தங்களது கால் நடைகளை யும் முற்றத்திலேயே கட்டி வைப்பார்கள். ஒவ் வொரு வீட்டிலும் புருக்கள் வளர்ப்பார்கள்.

முற்றத்தின் உள்ளே மண்ணாலாகிய ஒரு மேடை அமைக்கப்பட்டிருக்கும். அம்மேடை அவர் களுக்கு மழைக் காலங்களில் தூங்கப் பயன்படு கின்றது. தங்கள் குழந்தைகளைப் பாம்பு, தேள் இவற்றிலிருந்து காப்பாற்ற அவர்களையும் அம் மேடையின் மீதே விளையாட விடுவர். குளிர் காலங் களில் குடும்பம் முழுவதும் காற்று வசதியற்ற அவ் வீடுகளின் அறைகளில் தூங்குவர்.

**எகிப்தின் பெரிய அணைக்கட்டும், நகரங்களும்:**

எகிப்தின் நகரங்கள் அனைத்தும் மிக்க இன்பம் பயப்பவை. **அஸ்யூட்** என்னுமிடத்தில் கிறிஸ்தவ போதகர்களால் ஏற்படுத்தப்பட்ட அமெரிக்கன் கல்லூரி ஒன்று உள்ளது. இக்கல்லூரியில் கல்வி பயின்ற மாணவர்களுக்கு எகிப்தில் எளிதில் அரசாங்க அலுவல்களும், உயர் பதவிகளும் கிடைத்து விடும். **கெனு** என்னும் நகரம் மண் பாண்ட வேலைகளுக்குப் பெயர் பெற்றது. நகரங்கள் பெரும்பாலும் அயல்நாட்டு யாத்ரிகர்கள் தங்கு மிடங்களாக இருப்பதால் அவை செழித்தோங்கு கின்றன. **லக்ஸார்** நகரம் மிக்க செழிப்பு வாய்ந்துள் ளது. அதன் காரணம் அது எகிப்து நாட்டின் மத்தி யில் அமைந்திருப்பதோடு, நல்ல சீதோஷ்ண நிலையையும் பெற்றிருக்கிறது.

**அஸ்வான்** நகரமும் மிக்க சிறப்பு வாய்ந்தது. இங்கே யிருந்துதான் லிபியாப் பாலைவனத்தைக் கடக்கும் ஒட்டகங்கள் புறப்படுகின்றன. மற்றும் இங்கே எகிப்தியர்கள் தங்கள் சிலைகளுக்கும், கோவில்களுக்கும் பயன்படுத்திய சிவந்த நிறமான

கற்கள் கிடைக்கின்றன. இக்காலத்தில் அஸ்வான் நாகரிக உணவு விடுதிகளாலும், கட்டடங்களாலும் சிறப்புற்று விளங்குகிறது. ஆனால் இவற்றால் மட்டுமின்றி இங்கே கட்டப்பட்டுள்ள அணைக்கட்டும் இதற்குப் பெருமையைத் தேடித் தருகின்றது. இவ்வணை அஸ்வான் அணை என்று அழைக்கப்படுகிறது. சுமார் ஒன்றேகால் மைல் நீளமுள்ள இதில் நீரைத் திறந்து விடவும், மூடவும் நூற்றெண்பது கண்ணறைகள் அமைக்கப்பட்டுள்ளன. வெள்ளப் பெருக்குக் காலங்களில் இந்நீர் அணையில் தேக்கப்பட்ட பின்னரே விவசாயத்திற்காகக் கண்ணறைகள் திறக்கப்படுகின்றன.

**மேல் எகிப்து மக்கள் :**

இம்மக்கள், கீழ் எகிப்தியர்களைப் போலன்றிக் கரிய நிறம் வாய்ந்தவர்கள். கீழ் எகிப்தில் காணப்படுவதைவிட இவர்கள் தங்கள் வீடுகளை அழகாகவும் தூய்மையாகவும் வைத்துக்கொண்டிருக்கின்றனர். இவர்கள் கிராமங்களும் அழகுடனும், தூய்மையுடனும் விளங்குகின்றன. இவை மிக்க அறிவுத் திறனுடன் அமைக்கப்பட்டிருக்கின்றன. இம்மக்கள் மிக்க சுறுசுறுப்பும் புத்திக் கூர்மையும் உடையவர்கள். இம்மக்கள் **கலாபா** (Galabeah) என்னும் ஒருவகை நீண்ட அங்கியை அணிகிறார்கள் ; அத்துடன் தலைக்கு வெள்ளை உருமாலையும் அணிகின்றனர். இவ்வினத்துப் பெண்களுக்குப் பொன்னாலும், வெள்ளியாலும் ஆன அணிகலன்களை அணிவது மிக விருப்பமானதொன்றாகும்.

இங்கு டெல்டாப் பகுதிகள் மிகச் செழிப்புடையனவாயினும் நைல் ஆற்றின் நீர் நேரடியாகப் பாய்வதில்லை. எனவே பாசன வசதிக்காகப் பல கால்வாய்களை வெட்டி யிருக்கின்றனர். இந்த

டெல்டாப் பகுதிகளே எகிப்தின் மிக்க செழிப்பான இடங்களாகும். இங்குப் பருத்தி ஏராளமாக விளை கிறது. அதனுல் மக்கள் தொகையும் இங்கு ஏராள மாகப் பெருகி இருக்கிறது. செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் பருத்தி நன்கு விளைந்து விடுவதால் அவற்றைப் பறித்தெடுப்பதற்காக அனைவரும் வயல் களில் வேலை செய்ய வேண்டியுளது. இங்கு விளை யும் பருத்தி **அலெக்ஸாண்டிரியாத்** துறைமுகத்தின் வழியாக அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படு கிறது. இந்நகரம் மிக்க மக்கள்தொகை கொண்டது. அழகிய துறைமுகம் இதற்கு அணி செய்கிறது. இது எகிப்தின் தலைநகரான **கெய்ரோவில்** பாதியளவு உடையது. தற்கால முறையில் கட்டப்பட்ட அழகிய மாளிகைகள் இங்கு ஏராளமாக உள்ளன. பெரும் பான்மையான ஐரோப்பியர்களும், கிரேக்கர்களும் இந்நகரிலேயே வாழுகின்றனர். எகிப்து மக்களுடன் இத்தாலியர்களும், ஆர்மேனியர்களும், யூதர்களும், துருக்கியர்களும், பிரெஞ்சுக்காரர்களும், ஆங்கிலே யர்களும் பெரும் நகரங்களில் ஒன்ருகக் கலந்து வாழுகின்றனர்.

முற்காலத்தில் எகிப்துக்கு வரும் யாத்ரிகர் களின் கப்பல் பெரும்பாலும் அலெக்ஸாண்டிரியாத் துறைமுகத்திற்கே வரும். ஆனுல் இக்காலத்தில் **சையத்** (Said) துறைமுகத்திற்குச் சென்றுவிடுகிறது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னுல் இத்துறைமுகப் பட்டினம் சாதாரண ஒரு நகரமாகவே இருந்தது. ஆனுல் இன்று அது எகிப்திலேயே மூன்ருவது பெரிய பட்டினமாக விளங்குகிறது. ஏனெனில் இது சூயஸ் கால்வாயின் வாயிலில் அமைந்துள்ளது.

**சூயஸ் கால்வாய் :**

மத்தியதரைக் கடலையும், செங்கடலையும் இணைக் கும் இக்கால்வாய் 1869ல் திறந்து விடப்பட்டது.

இது பெர்டினூண்டு தே வெஸப் என்பவரின் மேற்பார்வையின் கீழ்ப் பிரெஞ்சுப் பொறி இயல் வல்லுநர்களால் வெட்டப்பட்டது. **கரர்நாக்** என்னுமிடத்திலுள்ள ஒரு கல்வெட்டிலிருந்து இக்கால்வாய் நைல் நதிக்கும் செங்கடலுக்கும் இடையில் கி.மு. 1380க்கு முன்பும் இருந்ததாகத் தெரிகிறது. இது அக்காலத்திலேயே மிகுந்த முக்கியத்துவமுடையதாக இருந்ததெனின், இக்காலத்தில் இதன் முக்கியத்துவத்தைக் கூறவும் வேண்டுமோ? இக்கால்வாய் மட்டும் இல்லாதிருப்பின் செங்கடலினின்றும் கப்பல்கள் மிகப் பெரிய ஆப்ரிக்காக் கண்டத்தைச் சுற்றிக் கொண்டு சென்றல்லவா மத்தியதரைக் கடலை அடையவேண்டும். இதனுல் பல்லாயிரம் மைல்கள் அனுவசியமாகச் செய்யவேண்டிய பிரயாணம் தவிர்க்கப்படுகிறது.

டெல்ட்டாவின் மத்திய பாகத்திலுள்ள **டான்டாப்** என்னும் பகுதி புனிதமான பெரியவர்களைப் புதைக்குமிடமாக உள்ளது. அந்த இடத்தில்தான் எகிப்தின் பெரிய ஞானியான '**சிடி அஹமத் எல் பெடாலி**'யின் உடல் புதைக்கப்பட்டிருக்கிறது. அவர் நினைவாக ஆண்டுக்கொரு முறை அங்கு நடக்கும் திருவிழாவிற்கும், சந்தைக்கும் எகிப்தின் எல்லாப் பாகங்களிலிருந்தும் மக்கள் கூடுகிறுர்கள்.

எகிப்தின் வடபகுதி பாறைகளால் ஆகியது. இங்குத்தான் ஆதி எகிப்தியர்கள், சுரங்கங்கள் தோண்டித் தங்கமெடுத்தார்களாம். **சினய் பீடபூமி**யும் சுரங்கப் பொருட்களை உடையதாக இருக்கிறது. மேற்குப் பகுதியிலுள்ள லிபியப் பாலைவனத்தில் வீசும் காற்று எகிப்துக்குச் சிற்சில சமயங்களில் மண் மாரியைக் கொண்டுவருகிறது. **பெடூயின்** என்னும் இனத்தவர்கள் இங்குள்ள பாலைவனச் சோலைகளில் வாழுகிறுர்கள்.

எகிப்து ஒரு சிறிய நாடுதான்; ஆயினும் அதன் பழைய நாகரிகமும், மக்கள் வாழ்க்கையும், இக்கால வளமும் அதைக் காண்போருக்குப் புத்துணர்ச்சியை ஊட்டிக்கொண்டிருப்பதாக உள்ளது. இந் நாட்டிலுள்ள முக்கிய நகரங்கள் இக்கால நாகரிகத்தின் சின்னங்களாகவும் உள்ளன.

**கெய்ரோ :**

கெய்ரோ, எகிப்து நாட்டின் தலைநகரம். இந் நகரில் மட்டும் பதின்மூன்று இலட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் வாழுகின்றார்கள். ஏனைய நகரங்களை விட மக்கள் தொகையிலும், பரப்பளவிலும் இது பெரியது. இந்நகரம் உருவாகிய வரலாறே மிக்க சுவை பயப்பதாகும். பாரோக்களும், பெரிய மன்னர்களும் ஆண்ட காலத்தில் இந்நகரம் இருக்கவில்லை; கி. பி. 641ல் இரண்டு கோட்டைகளைத் தவிர எகிப்தில் பெரிய நகரங்களே இருக்கவில்லை. பின்னர் **உமர்** என்னும் கலிபாவினுடைய படைத்தலைவன் இக்கோட்டைகளைக் கைப்பற்றி ஒரு சிறிய நகரையும் உருவாக்கினான். அதற்கு அவன் அல் **பஸ்தாத்** (Al Fustat) என்று பெயரிட்டான். இதுவே முஸ்லிம்களின் முதல் தலைநகரமாக இருந்தது. அரபு மொழியில் 'பஸ்தாத்' என்பதன் பொருள் 'கூடாரம்' என்பதாம். இப்பெயர் எங்ஙனம் உண்டாயிற்று என்பதைப்பற்றி அராபியர்கள் ஒரு கதை சொல்லுகிறார்கள். அதாவது முஸ்லிம் படைத்தளபதி வடக்கு நோக்கி அலெக்ஸாண்டரியாவை வெற்றிகாணச் செல்லும்போது, அவன் தனது கூடாரத்தைக் கலைக்காமல் விட்டுச்சென்றான். ஏனெனில் அப்போது தான் அதில் குடியேறி கூடுகட்டி வாழ ஆரம்பித்த புறாக்களுக்கு அவன் தொந்தரவளிக்க விரும்பவில்லை. பின்னர் அவன் அலெக்சாண்டரியாவை வென்று

திரும்பியபின்னர்த் தன் படைவீரர்களுக்குத் தான் விட்டுச் சென்ற கூடாரத்தைச் சுற்றி வீடுகள் அமைத்து வாழும்படி கட்டளையிட்டான். அதி லிருந்து அது பெருகி முதல் அராபியர் நகரம் உரு வாயிற்ரும். அவ்வாறு கூடாரத்திலிருந்தே வளர்ந்த அந் நகருக்கும் அப்பெயரே வழங்கிற்ரும்.

கி. பி. 969ல் ஒரு புதிய அராபிய வெற்றி யாளன் எகிப்துக்கு வந்தான். அவன் **பஸ்தான்** என்னுமிடத்தைக் கைப்பற்றி, ஒரு புதிய நகரை நிர் மாணிக்க ஆயத்தங்கள் செய்தான். அவன் ஆகஸ்டு மாதத்தில் ஒரு நாளிரவு தன் புதிய நக ரின் எல்லைகளைக் குறித்து, அவற்றின் நான்கு மூலை களிலும் பெரிய கம்பங்கள் நடுவித்து, ஒன்றுடன் ஒன்றை நீண்ட கயிறுகளால் இணைத்தான். பின்னர் அக்கயிற்றில் பல மணிகளைக் கட்டித் தொங்கவிட் டான். குறித்த நேரத்தில் புதிய நகரின் நிர்மாண வேலையைத் துவக்கினுன். அப்பொழுது புதன் நட் சத்திரம் வானில் தோன்றியது. எனவே புதிய நக ரம் அந்த நட்சத்திரத்தின் பெயராலேயே அழைக் கப்படலாயிற்று. அந்நகருக்கு '**கஹிரா**' என்பது பெயர். அதன் பொருள் 'வெற்றியின் தன்மை' என்பதாகும். இந்நகரமே பின் நாளில் கெய்ரோ என மருவியது.

கெய்ரோவைப் பற்றிப் பிற்காலத்தில் அதன் சிறப்பைக் கூறும் பின்வரும் மொழிகள் ஏற்பட்டன: 'எவனொருவன் கெய்ரோவைக் காணவில்லையோ, அவன் உலகைக் காணுதவனுவான். அதன் பொன் னிறமான மண்ணும், நைல் நதியும் உலகின் அற்பு தங்கள்.' கி. பி. 1517ல் கெய்ரோ துருக்கியர் வச மாயிற்று. பின்னர் 1798ல் அது பிரெஞ்சுக்காரர் கள் வசமிருந்தது. பின்னர் ஆங்கிலேயர்கள் அதை மீண்டும் 1801ல் துருக்கியருக்கே திருப்பியளித்

தனர். 1882-ல் ஆங்கிலேயரே மீண்டும் அதைக் கைக்கொண்டனர்.

1883-ல் கெய்ரோ மிகவும் சிறியதாய், ஒழுங்கற்ற சாலைகளை உடையதாய், இடிந்துபோன அரண்மனைகளையும் மாளிகைகளையும் உடையதாய் இருந்தது. ஏராளமான ஐரோப்பியர்கள் அங்குக் குடியேறி வாழ்ந்தனர். ஐரோப்பாவில் இரயிலும், மின்சாரமும் கண்டுபிடிக்கப்பட்ட பின்னர், அந்நகரம் வெகு வேகமாக வளர ஆரம்பித்தது. ஐம்பதாண்டுகளுக்கு முன்பு இருந்ததைவிட இன்று அது பன்மடங்கு வளர்ந்து வியப்பை ஊட்டுகிறது.

இற்றை நாளில் கீழ்நாட்டு மேல்நாட்டு நாகரிகங்கள் கலந்து காணப்படும் நாகரிக நகரமாகக் கெய்ரோ விளங்குகிறது. ஐரோப்பிய முறையிலும் எகிப்திய முறையிலும் கட்டப்பட்டுள்ள மாளிகைகள் அந்நகருக்குப் புதுமைப் பொலிவையும், பழமை நினைவையும் ஊட்டி நிற்கின்றன. கெய்ரோவின் முழுச் சிறப்பையும் அங்குள்ள பின்வரும் இப்பகுதிகளில் காணலாம். **தாபுகியா, இஸ்மெய்லியா, காஸ்ர்-எல்-துபாரா** ஆகிய பகுதிகள் நகரின் வடமேற்கில் அமைந்துள்ளன. இங்கே மிகப் பெரிய நவீன உணவு விடுதிகளும், உண்டியல் நிலையங்களும், செல்வந்தர்களின் அழகிய மாளிகைகளும், அரசாங்க அலுவலகங்களும் உள்ளன.

தாபுகியின் மத்தியில் **'எஸ்பிகியா'** என்னும் அழகுப் பூங்கா அமைந்துள்ளது. இப்பூங்கா எகிப்திலுள்ள பூங்காக்களில் மிகவும் சிறந்தது. இதன் தென் மூலையில் இசை மண்டபம் ஒன்றும் உள்ளது. ஐரோப்பியர்கள் வாழுமிடத்திற்கு வடமேற்குப் பகுதியில் கெய்ரோவின் பழம் பகுதியான **'மூலக்'** உள்ளது. அது இன்றளவும் நைல் நதியில் படகு

களில் பொருட்களை ஏற்றுமதி, இறக்குமதி செய்யுமிடமாக அமைந்துள்ளது. கெய்ரோவின் ஏனைய பகுதிகளைப்போலவே இப்பகுதியும் அழகுடையதாகவும், உயிருடையதாகவும் இலங்குகிறது. முக்கிய விழாக்காலங்களில் இப்பகுதி மிகவும் சிறப்புற்று விளங்கும். மக்கள் பல்வேறு வண்ண ஆடைகளால் தங்களை அலங்கரித்துக்கொண்டு, விழாக் கோலம் பூண்டு, தெருக்களில் செல்வது அழகு பயக்கும் காட்சியாகும். இப்பகுதிக்கு நேர் எதிரில் '**கேஜிரா**' என்றழைக்கப்படும் ஒரு சிறு தீவு உள்ளது. அங்கே **இஸ்மாயில் பாஷா** என்பவரால் கட்டப்பட்ட ஓர் அற்புத அரண்மனை உள்ளது. அது அராபிய மன்னர்களால் அக்காலத்தில் கட்டப்பட்டவை போன்று அத்துணைச் சிறப்புடையதாய் உளது. தற்போது அவ்வரண்மனை ஓர் உயர்தர உணவு விடுதியாக உள்ளது. அங்கே **கெடீவல் விளையாட்டுக் கழகம்** எப்போதும் தன் நிகழ்ச்சிகளை நடத்திக் கெய்ரோவிலுள்ள எகிப்தியரையும், ஐரோப்பியரையும் மகிழ்வித்து வருகிறது. மாலைவேளைகளில் 'கேஜிரா'வுக்குச் செல்லும் சாலையில் மக்கள் கூட்டமும், வாகனங்களின் கூட்டமும் நிறைந்து காணப்படும்.

நைல் நதியின் பெரும்பாலம் அல்லது 'காஸ்ர் இன் நைல்' என்னும் பாலம் கேஜிராத் தீவையும் நைல் நதியின் கிழக்குக் கரையையும் இணைக்கிறது. கெய்ரோவின் மக்கள், மாலை நேரத்தில் உலாவுவதற்காகப் பெரும்பாலும் இப்பாலத்திற்கே வந்து நைல் நதியின் காட்சிகளைக் கண்டுகளிப்பர். கிழக்கே பாலம் முடியும் இடத்தில் கெய்ரோவின் பொருட்காட்சிச்சாலை உளது. இப்பொருட்காட்சிச் சாலையில் தான் எகிப்தின் புராதன சின்னங்கள் பாதுகாத்து வைக்கப்பட்டிருக்கின்றன. பாரோ மன்னர்களின் சவங்களும் இங்கேதான் உள்ளன. இப்பொருட்

காட்சிச்சாலை ஒரு பிரெஞ்சுக்காரருடைய முயற்சியால் உருவாக்கப்பட்டதாம்.

கெய்ரோவில் காணப்படும் உணவு விடுதிகளில் உலகின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வந்துள்ள மக்களைக் காணலாம். இங்கே இத்தாலிய மக்களும், கிரேக்கர்களும், லவெண்டியர்களும் கூச்சலிட்டு ஒருவரோடு ஒருவர் உரையாடும் காட்சியும், எகிப்திய முறையில் ஹுக்கா குடித்து மகிழ்ந்திருக்கும்காட்சியும் மிகச் சாதாரணமானவை. அத்தகைய உணவு விடுதிகளை ஒட்டிச் சாலைகளில் சிறிது தூரம் நடந்தால் காணும் காட்சிகள் மிக்க இன்பமளிப்பவை. சாலையின் ஓரங்களில் பலவிதப் பழக் கடைகளும், அலங்காரப் பொருட்களின் கடைகளும், அணிகலன்களின் கடைகளும் சாலைக்கு அழகுசெய்யும். சாலையில் நடந்து செல்வோரின் கூச்சல்களும் வாகனங்களின் ஒலியும், ஒட்டகங்களின் மீது ஏறிச் செல்வோரின் கம்பீரமும் அச்சாலைகளுக்கு உயிரூட்டிக்கொண்டிருக்கும்.

கெய்ரோவிலுள்ள இப்ராகிம் ஆகா மசூதியும், சுல்தான் அஸன் மசூதியும், அந்நகருக்கு அணிசெய்கின்றன. அங்கேயுள்ள அராபியப் பொருட்காட்சிச்சாலை அராபியர்களின் கலைத்திறனுக்கும், அழகுணர்ச்சிக்கும் எடுத்துக்காட்டாய்த் திகழ்கிறது. அத்துடன் இணைக்கப்பட்ட நூல்நிலையத்தில் அராபிய நூல்கள் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன.

கெய்ரோவிலுள்ள 'மொக்காடாக்' மலைமீதுள்ள கோட்டையின் மீது ஏறிப் பார்த்தால், கெய்ரோ நகர் முழுமையும் காணலாம். இந்தக் கோட்டை எகிப்து நாட்டில் உள்ள பிரமிடுகளினின்றும் எடுக்கப்பட்ட கற்களைக் கொண்டு கட்டப்பட்டது என்று சொல்லப்படுகிறது. இங்கிருந்து பார்த்தால் கெய்ரோ

நகரிலுள்ள இருநூற்றைம்பது மசூதிகளின் உச்சி களும் அழகுறக் காட்சியளிக்குமாம். இந்நகரில் முதன் முதலில் 'அமர்-இபின்-அல்-அசி' என்னும் மன்னனால்தான் மசூதி ஒன்று கட்டப்பட்டதாம். இக்காலத்தில் காணப்படும் **அமர் மசூதி** அதே இடத்தில் அமைந்துள்ளது அந்நகருக்குப் பெருமை யளித்து வருகிறது. ஆனால் பழைய மசூதியின் சிறு பகுதியே தற்காலத்தில் உள்ளது. நெடுங்காலம் எகிப்தில் மழை பெய்யாததால் இஸ்லாமியர்களும், கிறிஸ்தவர்களும், யூதர்களும் இம்மசூதியில் சென்று மழைக்காகக் கடவுளை வணங்கியதாயும், அடுத்த நாளே மழை பெய்ததாயும் வழங்கும் செய்தி இம் மசூதியின் பெருமையில் ஒன்றாகக் கூறப்படுகிறது.

இந் நகரெங்கும் பழங்காலக் கல்வெட்டுக்களும், மசூதிகளும், அரண்மனைகளும் நிறைந்து காணப்படு கின்றன. இப் பழமை பொருந்திய நகரம் எகிப்து நாட்டின் தலைநகராக இருந்து அந்நாட்டின் புரா தனப் பண்பாட்டையும், இக்காலச் சிறப்பையும் உணர்த்தி, தனக்கே உரிய கம்பீரத்துடனும் பெருமையுடனும் விளங்குகின்றது.

## 2. பெர்சியாவும் அதன் மக்களும்

பெர்சியா நாடு மத்தியக்கிழக்கு நாடுகளில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்ததாகும். பெரிதும் பீடபூமியாகக் காணப்படும் இப்பெரும் நாடு, கிழக்கிலுள்ள இந்தியாவுக்கும் மேற்கிலுள்ள ஈராக் அல்லது மெசொபொடேமியாவுக்கும் இடையில் பரந்து கிடக்கின்றது. இதன் வடக்கில் அமைந் துள்ள காஸ்பியன் கடலின் இருமருங்கிலும் பெர்சி

யாவின் எல்லையும் ருஷ்யாவின் எல்லையும் வந்து கூடுகின்றன. இதன் தெற்கில் 'பெர்சியன் குடா' அமைந்துள்ளது.

பெர்சியர்கள் தங்கள் நாட்டை **ஈரான்** என்றும், தங்களை **ஈரானியர்** என்றும் கூறிக்கொள்கின்றனர். ஈரானியர் என்ற சொல்லானது, 'ஆரியன்' என்ற சொல்லின் மரூஉ என்றும் கூறப்படுகிறது. அவர்களது ஆதிகால வரலாறுகள் பெரும்பாலும் கர்ண பரம்பரையானவை. ஆயின், ஆரம்பத்தில் நாடோடிகளாகத் தூரக்கிழக்கு நாடுகளில் அலைந்து திரிந்து வந்தவர்கள், காஸ்பியன் கடற்கரை நாடுகளின் வளப்பத்தைச் செவியுற்று, அங்குச் சென்று குடியேறினர் என்று கூறப்படுகிறது. சுமார் கி. மு. 550ல் பழங்கால வரலாற்றில் இடம் பெற்ற **'சைரஸ்'** என்னும் பேரரசன் ஒருவன், தன் அண்மையில் வசித்து வந்த இனத்தவர் அனைவரையும் வென்று, முதல் ஆரியப் பேரரசான பெர்சியப் பேரரசை ஏற்படுத்தினன். இவனுக்குப் பின் வந்தவர்கள் தங்கள் சாம்ராச்சியத்தை இந்தியாவில் பஞ்சாபிலிருந்து எகிப்து நாட்டின் பாலைவனங்களுக்கப்பால் நீட்டித்தனர். நாட்டை மேலும் விஸ்தரிக்கும் நோக்கத்தில் கிரீஸ் தேசத்தையும் வெற்றிகொள்ள முயன்றனர். ஆனல் கி. மு. 334ல் அலெக்ஸாந்தரால் தோற்கடிக்கப்பட்டு நாட்டை இழந்தனர். மாவீரர் அலெக்ஸாந்தரால் கைப்பற்றப்பட்ட பெர்சியப் பேரரசு ஒரு கிரேக்கச் சிற்றரசாக மாறி அவரது ஆட்சிக்கு உட்பட்டது.

கிரேக்கச் சிற்றரசாக அடிமைப்பட்டிருந்த பெர்சியா சுமார் 600 ஆண்டுகட்குப் பின் தன் பழைய சிறந்த நிலையை அடைந்தது. அதற்கு முக்கிய காரணமாக விளங்கியவர்கள் **சஸ்ஸேனியன்** அரசர்களாவார்கள். இவ்வரசர்களால் பெர்சியா, தான் இழந்த நாகரிகம், புகழ், தன் பழைய பண்

பாடுகள் ஆகிய அனைத்தையும் திரும்பப் பெற்றது. நாட்டில் அவர்கள் காலத்தில் செல்வ நிலை உயர்ந்து விளங்கியது. ஆயின் அவர்களது ஆட்சியும் நெடுங் காலம் நீடித்திருக்கவில்லை. கி. பி. ஏழாம் நூற்றாண் டில் அராபியர்கள் இந்நாட்டை வீழ்த்தினர். அது வரை அது தன் பெருமைகளுக்கு நிலைக்களனாய் விளங்கியது என்றே கூறலாம்.

அராபியர் தங்கள் நாட்டின்மீது படையெடுத்து வரும் வரையில் பெர்சியர்கள் **ஜொராஸ்ட்ரிய** மதத் தைக் கைக்கொண்டு அதன் விதி முறைகளை ஒட்டி வாழ்ந்தனர். அவர்கள் சூரியனையே தங்கள் முக்கிய மான தெய்வமாகப் போற்றி வழிபட்டனர். ஆனால் அராபியர் படையெடுப்பினால் அவர்கள் தங்கள் மதத்தை விடுத்து இஸ்லாம் மதத்திற்கு மாற்றப்பட் டனர். ஆயின் இன்றும் 'ஷீட்' அல்லது 'பிரிந்தவர் கள்' என்று வழங்கப்படும் இஸ்லாத்தின் ஒரு பிரிவினராகவே வாழ்கின்றனர்.

அராபியர்களின் ஆட்சி சிறந்ததாயினும் நீண்ட தாயில்லை. மங்கோலிய மன்னனான **செங்கிஸ்கா** னின் படையெடுப்புக்கு அரேபியா அடிபணிந்தது. அதன் பின்பு தாத்தார் தேசத்தலைவன் டேமர்தேன் தன் பரிவாரங்களுடன் மேற்கு நோக்கி வருகையில் அவனை வரவேற்று இடமளித்து உபசரித்து அடி பணிந்தது பெர்சியா. பதினாறும் நூற்றாண்டில் **இஸ் மாயீல்** என்ற ஆண்மையும் வீரமும் அமையப் பெற்ற இளைஞன் ஆட்சிக்கு வந்தனன். 'சபாவித்' என்ற வமிசத்தையும் அவனே தோற்றுவித்தான். இவ்வமிசத்தின் கீழ்த் தோன்றிய முதல் சபாவித் அரசர்கள் காலத்தில் நாட்டின் எல்லைகள் விரிந்தன. நாடு கலை நுணுக்கங்களிலும் செல்வ நிலையிலும் மேம் பாடடைந்து விளங்கியது. இவர்களது காலத்திலே தான் பலவித வண்ணங்கள் தீட்டும் நுட்பக்

கலையும், கண்ணைக் கவரும் வண்ணத் துகிலும் அது வரை எங்கும் அடைந்திராத உன்னத நிலையில் விளங்கின. மக்கள் கலையறிவு மிக்கவராயும், தொழில்திறன் மிகுந்தவர்களாயும் விளங்கினர்.

ஆயின் இவர்களை அடுத்து வந்த அரசர்கள் அத்துணை வலிமையுள்ளவர்கள் அல்லர். ஆதலின் கொஞ்சம் கொஞ்சமாகப் பெர்சியா தன் பெருமையிலும் நிலப்பரப்பிலும் குறைந்து இப்போது உள்ள எல்லைகளுக்குள் அடங்குவதாயிற்று. அது இந் நிலைக்கு மாறவும் சில நூற்ருண்டுகள் கழிந்தன. இருபதாம் நூற்ருண்டில் இது '**காஜர்கள்**' என்பவர் களின் கீழ்ப்பட்டது. இவர்கள் காலத்தில் இந்நாடு அரசியல் குழப்பங்களிலும், சூதாட்டங்களிலும் சிக்கிச் சீரழியலாயிற்று. ஆனல் 1925 ஆம் ஆண்டு மக்கள் தலைவன் **ரிஜாகான்** என்பவன் காஜர் களை ஒழித்து, நாட்டை நன்னிலைக்குக் கொண்டு வந்தான்; பின்னர் '**ஷா**' என்னும் பட்டத்துடன் நாட்டின் மன்னனும் ஆனன்.

பெர்சியாவின் தட்பவெப்பம் உச்சநிலை வாய்ந் தது. ஏனெனில் மழைக்காலத்தில் நிலமெங்கும் மூடுபனியால் சூழப்பட்டு விளங்கும் காட்சி மிகவும் இயல்பான தொன்ருகும். ஆயின், கோடை மாதங் களிலோ, இதற்கு நேர் மாருகக் கதிரோனின் கடுங் கதிர்கள் காயும். குறிப்பாகக் கடற்கரையில் தாழ்ந்த மட்டத்தில் அமைந்துள்ள மாகாணங்களில் வெப்பம் வெகு கடுமையாக இருக்கும். பொதுவாக, இதன் தட்ப வெப்பத்தை வரையறுக்குமிடத்துச் சாதாரண மாக வறண்ட வெப்பமும், பீடபூமியில் இன்பமான தட்ப வெப்பமும் காணப்படுகின்றன. ஆயினும் இங்கு உண்டாகும் புயல்களை நினைக்குமிடத்து அச் சத்தைத் தரும் அளவிற்கு அவை நாசத்தை விளைப் பனவாய் உள்ளன. இப்பிரதேசத்தில் மழை சொற்ப

அளவே பெய்கின்றது. இக்காரணத்தால் இந்நாட்டின் சில பகுதிகளில் தண்ணீர்ப் பஞ்சம் காணப்படுகிறது.

ஒரு நாட்டின் கண்ணெனக் கருதப்படுவது அதன் மக்கட் தொகையே யாகும். மக்கள் தொகையை நோக்கு மிடத்து, பெர்சியாவில் இப்போது சுமார் ஒன்றரைக் கோடி மக்கள் வாழ்ந்து வருகிருர்கள். இந்நாட்டின் பரப்பளவு பிரான்சு நாட்டின் பரப்பளவைப்போல் மும் மடங்காகும். ஆயினும் இங்கு மக்கள் சிதறியே வாழ்கின்றனர். காரணம் மேற்கூறிய நீர்ப்பஞ்சமேயாகும். ஆகவே இங்கு மக்கள் சஞ்சாரமற்ற வறண்ட பாலை நிலங்கள் அதிகம் காணப்படுகின்றன.

பரந்து விளங்கும் காஸ்பியன் கடலுக்குத் தென் திசையில் **எல்பர்சு மலைகள்** பெர்சியாவின் குறுக்காக அமைந்துள்ளன. இவற்றில் பெருஞ்சிகரமாக விளங்கும் **டமாவெண்டு** ஏறக்குறைய 19,400 அடி உயரம் உள்ளது. இது ஆசியாவின் மிக உயரமான மலையான இமாலயத்திற்கு மேற்கில் கம்பீரமாக விளங்குகிறது. பெர்சியாவின் மற்ற இடங்களில் உள்ள மலைத்தொடர்கள் தென்கிழக்கிலிருந்து வடமேற்காக ஓடியிருப்பதால் பெர்சியன் குடாவிலிருந்தும், இராக்கிலிருந்தும் இந்நாட்டினுள் நுழைவது அவ்வளவு எளிதான காரியம் அன்று. முக்கியமான இடங்கள் யாவும் இம்மலைகளைச் சுற்றியே அமைந்துள்ளன. தேசப்படத்தில் பார்த்தால் இந்நாட்டின் முக்கிய நகரங்களாக விளங்கும் **டெகரன், மெஷட்,** புனித பெர்சியா நகரமாகவும் முக்கிய வியாபார கேந்திரமாகவும் விளங்கும் **டாப்ரீஸ்** ஆகிய இவை யாவும் இம்மலைகளுக்கு அருகிலேயே காணப்படும். ஒரு நாட்டின் அல்லது நகரத்தின் பரிமாணம் அதன் அருகிலமைந்துள்ள மலைகளையும், அங்குக்

கிடைக்கும் நீர்ப்பெருக்கையும் பொறுத்ததாகும். ஏனெனில் நீருண்ட மேகங்களைத் தடுத்து மழையைப் பொழியவைக்கும் மலைகள் இல்லையேல், நாட்டில் மழையும் அதிகம் இல்லையாம். அடர்ந்த காடுகளும் மரங்களும் மழை பெய்வதற்குத் தேவையானவை. ஆனபோதிலும் அவைகளும் நிலை பெற்று வளர மழையையே நம்பி இருத்தலின், மழை வளம் நாட்டிற்கு இன்றியமையாததாகும். வன் பாலையின் நிலையை ஆய்ந்து பார்க்குங்கால் மழையின் சிறப்புத் தெற்றனத் தெரியுமன்றோ? ஆயின் பெர்சியா நாட்டிலோ, மலைகளின் மேலுள்ள பனி வசந்த காலத்தில் உருகி அவை வரும் வழியிலுள்ள நீர்ப்பாசன வாய்க்கால்களை நிரப்புகின்றது. நீர் வளத்தினைப் பொறுத்தவரையில் பெர்சியா நாடானது, உருகும் பனியிலிருந்து கிடைக்கும் நீரையே ஆதாரமாகக் கொண்டுள்ளது.

பெர்சியாவின் இயற்கை யமைப்பில் அதன் பெரும் பாலைவனம் சிறப்பான தொன்றாகும். பெர்சிய மக்களின் குணநலன்கள், வாழ்க்கைமுறை, மற்றும் அவர்களின் அரசாங்கம் இவைகளை உருவாக்குவதில்—அது பெரும் பங்கு கொண்டுள்ளது. இப்பாலைவனம் இந்நாட்டின் நடுவில் அமைந்து, அதன் மாகாணங்களில் ஒன்றை மற்றொன்றிலிருந்து திட்டவட்டமாக வேறுபடுத்தியிருக்கிறது.

13ஆம் நூற்றாண்டின் சிறந்த யாத்திரிகரான மார்க்கோ போலோ பெர்சியாவையும் சுற்றுப்புறங்களையும் பார்வையிட்டார். அவர் தம் குறிப்பில் "பெர்சியாவின் தென்பகுதி மிகவும் கொடிய பாலைவனம். இங்கு பழங்களோ மரங்களோ காணக் கிடைக்கா. இங்குக் கிடைக்கும் சிறிது தண்ணீரும் கசப்புடன் கெடுதலும் விளைக்கக் கூடியதாக உள்ளது. ஆகவே அங்கு நாம் செல்ல வேண்டுமாயின்

நம்முடன் கூடவே உணவும் தண்ணீரும் கொண்டு செல்லவேண்டும்,'' என்று கூறுகிருர். இப்பாலைவன மானது கலகக்காரர்களுக்கும், கொள்ளைக் கூட்டத் தாருக்கும் புகலிடமாயுள்ளது. இங்கு வந்துவிடும் எந்தக் கள்ளனையும் பிடிப்பதென்பது அவ்வளவு எளிதான காரியமன்று. ஆகவே நாட்டில் கொள்ளை யும் கொலையும் செய்வோர் இவ்விடங்களில் மறைந்து திரிவர். இக்காரணங்களால் இவ்விடத்தில் அரசாங் கமும் வாணிகமும் நன்கு நடைபெறுவதில்லை.

இப்பீடபூமியைச் சுற்றி மிக உயரமான மலைகள் அமைந்திருப்பதாலும், அங்குப் பெய்யும் மழை மிக வும் குறைவாயிருப்பதாலும், சிந்து நதிக்கும், **சாட்-எல் அராப்** நதிக்கும் இடையில் நூற்றுக் கணக்கான மைல்கள் பரவியிருக்கும் இதன் கடற்கரைப் பிரதே சத்தில் சிறப்பாகக் கருதக்கூடிய நதி ஒன்றுகூட இல்லை. சாட்-எல்-அராப் நதியின் உபநதிகளில் ஒன்ருன கருன் நதி, முற்காலத்தில் '**எலாம் அரசு**' என்று கருதப்பட்ட இடத்தில் ஓடுகிறது. பரந்த நிலப்பரப்பைக் கொண்ட பெர்சியப் பேரரசில் இந்த நதி ஒன்றுதான் நீர்வழிப் பயணத்திற்கு உகந்ததாக உள்ளது. இதுவே இந்நாட்டில் அமைந்துள்ள சிறப்பான அம்சமாகவும் கருதப்படுகிறது.

ஈரானின் தென்மேற்கு, தெற்குக் கரைகளை அணைந்துள்ள **பெர்சியன் வளைகுடா** என்பது ஏறக் குறைய, பெரும் பகுதி நிலப்பகுதியால் அடைக்கப் பட்ட சுமார் 700 மைல் நீளமும், சராசரி 120 மைல் அகலமும் கொண்ட ஒரு நீர்த்தேக்கம் என்று கூறு வதும் பொருந்தும். அவ்வழியே வரும் **டைகிரீஸ், யூப்ரடீஸ்** என்ற நதிகளின் நீரானது சாட்-எல்-அராப் என்ற பெரிய நதியுடன் கலந்து சிறிது தூரம் ஓடு கிறது. பின்பு ஒன்ருகக் கலந்த **சாட்-எல்-அராப்** நதி யானது ஆழமதிகமற்ற அப்பெர்சியன் குடாவில்

வந்து விழுகின்றது. இரவின் நிலவொளியில் நாம் பிரயாணம் செய்வோமாயின் ஹார்மஸ ஜலசந்தியின் வழியாகச் சென்று, அதன் தெற்கில் நிற்கும் முசாண்டம் என்னும் கற்குன்று முனையைக் கடந்து பெர்சியன் குடாவில் நுழைவோம். நிலவொளியின் அழகில் முசாண்டன் எனப்படும் அக்குன்றுனது அழகுற விளங்குகிறது. இங்குப் பொழுது போக்கிற்காக இரவுக்காலங்களிலும்,பகற்காலங்களிலும் மீன் பிடிக்கக் குடும்பம் குடும்பமாக மக்கள் வருகிறுர்கள்.

பாசன வசதியற்ற நாட்டில் மரங்களோ, செடி கொடிகளோ அதிகம் காண முடியாது. வறண்ட பெர்சியா நாட்டில் நிறைய நீருள்ள இடங்களில்தாம் மரங்கள் அல்லது பயிர்கள் வளரும். பொதுவாக மூன்று அடி உயரம் வளர்ந்து காணப்படும் முட்புதர்களும் சிறிதளவு பசிய புல்லும் தான் இங்கு வளரும் தாவரங்கள். பசிய புல்லும் வசந்தகாலம் தோன்றிய ஒரு மாதம்தான் காணப்படும். சற்று நீர் வளமுள்ள இடத்தில் கோதுமை, பார்லி, சோளம், பருத்தி, அபினிச்செடி, இலவங்கம் முதலியவைகளும் புகையிலேயும் பயிராகின்றன. பார்லிதான் இங்குக் குதிரைகளின் சிறப்பான உணவாகும். சிறிது மழை பெய்யும் பகுதியான காஸ்பியன் மாவட்டத்தில் நெல்லும் மக்காச்சோளமும் நன்கு விளேகின்றன. பெர்சியா, பழங்களுக்குப் பெயர் பெற்றது. இங்குப் பழங்கள் நவீன விஞ்ஞான முறைப்படி சாகுபடி செய்யாதிருந்தபோதிலும், நல்ல பலனேயே கொடுக்கின்றன. பேரிக்காய், ஆப்பிள், குவின்செஸ், ஏப்ரிகாட், பலவிதமான ப்ளம் பழங்கள், பீச்சஸ், செர்ரீஸ் என்னும் பழவகைகளும் பெரும்அளவில் விளேகின்றன. சற்று வெப்பமான பகுதிகளில் சிறந்த பாதாமி, அத்தி, மாதுளே முதலியவைகளும் 'பிஸ்டாச்சியோ' கொட்டைகளும் நன்கு விளேகின்றன. தாழ்ந்த

வெப்ப நாட்டுப் பகுதியில் ஆரஞ்சு, பேரீந்து, எலு மிச்சை ஆகியவை காணப்படுகின்றன. பெர்சியா வின் 'திராட்சை' மிகப் பிரசித்தி பெற்றது. பீச், பிஸ்டாச்சியோ கொட்டை, நார்ஸிசஸ் ஆகியவை யாவும் இந்நாட்டின் பெயர்களையே கொண்டவை. இப்பொருள்கள் யாவும் பெர்சியாவிலிருந்தே நமக் குக் கிடைக்கின்றன.

பெர்சியா நீண்ட காலந்தொட்டே கம்பளங்க ளுக்கும் விரிப்புகளுக்கும் பெயர் பெற்று விளங்கு கிறது. அங்கு அவைகள் நேர்த்தியாகவும் அழகாக வும் நெய்யப்படுகின்றன. அவைகளில் செய்யப்பட் டுள்ள பூவேலைகளும் உருவங்களும் சிறந்த முறை யில் அமைக்கப்பட்டு, பெர்சிய மக்களது உயரிய கலைத் திறனையும் கைவன்மையையும் காட்டுகின் றன. இந்தக் கம்பளங்களை விற்கும் வாணிகர்களிடம் வாணிகம் செய்ய மக்கள் கையாளும் முறை ஒரு தனி முறையாகும். இவர்கள் கடையில் ஏதாவது வாங்க வேண்டுமென்றால் நீண்ட நேரம் தர்க்கம் செய்ய வேண்டியிருக்கும். ஆனால் இடையில் காபி யும் சிகரெட்டுகளும் நமக்கு வழங்கப்படும். ஆயி னும் அவர்கள் கருத்தெல்லாம் கடைக்கு வருபவர் களை வசப்படுத்துவதிலும், அவர்களிடமிருந்து மிக்க இலாபம் பெறுவதிலும் இருக்கும். சுருங்கக் கூறப் புகுந்தால், இங்கு நடைபெறும் வாணிகம் இலாபத் தையே நோக்கமாகக் கொண்டது என்றாலும் பொருந்தும். யாராவது முன்பின் அறியாது அவசரப் பட்டு விலையைத் தீர்த்தான் என்றால் அவன் ஏமாந் தவனாவான் ; நஷ்டமும் அடைவான். பெர்சியர்கள் கடைகளில் ஒரு வியாபாரம் மன நிறைவாய்ப் பேசி முடிக்கப் பல நாட்களும் கூட ஆகலாம். பட்டு, கம்பள நெசவு, சித்திரவேலைப்பாடு அமைக்கப்பட்ட மண் சாடிகள், உலோகப் பொருட்கள் ஆகியவை

செய்தலைத் தவிரப் பெர்சியாவில் தொழிலுற்பத்தி மிகவும் குறைவென்றேசொல்லவேண்டும். இங்குள்ள தொழிலுற்பத்திப் பொருட்களில் பெரும்பான்மை இறக்குமதி யாகின்றவையே. இவைகளிலெல்லாம் அதிக வருமானம் அடைய முடியாத பெர்சியா, எண்ணெய்க் கிணறுகளின் மூலம் ஏராளமான வருமானத்தைப் பெறுகிறது. ஆயினும் அவைகள் யாவும் பெர்சிய மக்களால் நடத்தப்படுவன அல்ல. வெவ்வேறு நாடுகளிலிருந்து வந்த பலர் அந்த எண்ணெய்க் கிணறுகளை நடத்துகின்றனர். ஆகவே அந்த வருமானமும் அவ்வாணிகக் குழுவினரையே சேருகிறது.

பழங்காலத்தில் பெர்சியன் குடாவிலிருந்து சிறந்த முத்துக்களை எடுத்து வந்தனர். இன்றும் பெர்சியாவில் முத்துக் குளிக்கும் தொழில் பழக்கத்தில் இருந்து வருகிறது. ஆனல் முன்பு நடந்தது போன்று பெரிய அளவில் அது நடைபெறுவதில்லை. இங்குச் சிறப்பாகக் குறிப்பிடக்கூடிய ஏற்றுமதிப் பொருட்களில் மண்ணெண்ணெய் முக்கிய இடம் வகிக்கிறது; அதோடு அபினி, சமுக்காளம்,கம்பளம் முதலியவைகளும் பேரீந்துமாகும். இவைகள் தகுந்த முறையில்அடைத்தும் கட்டுகளாகக் கட்டப்பெற்றும் ஒட்டகங்களின் மேலேற்றப்பட்டு பெர்சியன் குடாவின் துறைமுகங்களுக்கோ, அல்லது காஸ்பியன் கடல் துறைமுகங்களுக்கோ கப்பலில் அனுப்பக் கொண்டு செல்லப்படுகின்றன.

பண்டைக்காலம் தொட்டே ஒட்டகத்தின் மீது சுமையேற்றிச் செல்லும் வழக்கமே இந்நாட்டில் இருந்து வந்தது. சமீப காலத்தில் சில ஆண்டுகளாக அரசியலாரின் தீவிரமான முயற்சிகளால் புதுப் பாதைகள் போடுதலும், பழையன செப்பனிடுதலும் நடந்து வருகின்றன. சிறிது சிறிதாக நவீன நாகரிக

வசதிகள் யாவும் அமைக்கப்பட்டு வருகின்றன. பல நூறு மைல்களுக்குத் தொடர்ந்து இருப்புப்பாதைகள் போடப்பட்டு, மின்சார வசதியும், அதன் துணை வசதிகளான தொலைபேசி, தந்தி முதலியனவும் அமைக்கப்பட்டுள்ளன. பொழுதுபோக்கப் பூங்காக்களும், அறிவைப் பெருக்க உதவும் நூல் நிலையங்களும் ஆங்காங்கு நிறுவப்பட்டுள்ளன. பெர்சியா நகரின் தலைநகரான **டெகரான்** மற்றும் கெர்மான்சாவிலிருந்து பாக்தாதிற்கு வான ஊர்திகளும் முறையாகச்சென்று வருகின்றன. பாக்தாதிலிருந்து ஐரோப்பிய நகரங்களுக்கு விமானத் தொடர்புகள் உள்ளன.

பெர்சியா நாடானது தனது வளர்ச்சியின் அவசியத்தைச் சிறிது சிறிதாக உணர்ந்து வருகிறது. இருந்தபோதிலும் அதன் முன்னேற்றத்துக்கு ஏராளமான தடைகள் இருந்த வண்ணமாகவே உள்ளன. இத்தடைகளுள் மிகப் பெரிய தடையாகக் கருதப்படுவது இந்நாட்டு மத குருக்களால் ஏற்படுவதென்று சொல்லாம். ஏனெனில் மக்கள் நவீன நாகரிகங்களை ஏற்று, அவற்றின்படி நடக்க ஆரம்பித்தால் குருக்களால் ஏற்படுத்தப்பட்ட வழக்கத்திலிருந்து வரும் மூட நம்பிக்கைகளை அசட்டை செய்யலாம். அவைகளை நீக்கி விடலாம். பின்பு மக்களிடம் இவர்கள் பழைய செல்வாக்கையும் மதிப்பையும் எதிர்பார்க்க முடியாது. ஆகவே நாட்டில் ஏற்படும முன்னேற்றங்கள் எவையாயினும், அவை பழமையையோ, பழைய பழக்க வழக்கங்களையோ மாற்றுவதாயின் அவற்றிற்குத் தங்கள் உறுதியான எதிர்ப்பை இம் மத குருமார்கள் தெரிவிக்கின்றனர். மக்களைப் பலவிதங்களில் அச்சுறுத்தியும் கட்டாயப்படுத்தியும் தங்கள் மதக் கொள்கைகளையும், கோட்பாடுகளையும் நழுவ விடாமல் பாதுகாக்கின்றனர். ஆயினும், விழிப்படைந்து வரும் மக்களின் அறிவுக்கு முன்னர்,

அறிவுக்கு ஒவ்வாத கருத்துக்கள் எதிர்ப்படும்போது அவற்றை நீக்கிவிட்டு மக்கள் முன்னேறுவது இயல்பாகும்.

இந்நாட்டின் முதுகெலும்பு போன்றவர்கள் உழவர்களே. இது எல்லா நாடுகளிலும் பொருந்தும் விதியாகும். உழவர்கள் உழுது நாட்டுக்குச் சேவை செய்வதென்பது நூறு இராசதந்திரிகள் ஒரு நாட்டுக்குச் செய்யும் சேவைக்குச் சமமாகும். பெர்சியா நாட்டு உழவர்கள் ஒன்றுகூடிச் சிறு கிராமங்களாக அமைத்து வசிக்கிறார்கள். இவர்களது கிராமம் உயரமான மண் சுவரினால் சூழப்பட்டிருக்கும். இதிலுள்ள வீடுகள் ஒரே அளவினவாகவோ, அழகு பெறவோ அமைக்கப்பட்டிருக்கமாட்டா. காரணம் அவர்கள் இடையில் நாகரிகம் பரவாததேயாகும். கிராமத்தின் நடுவில் காலையில் ஓட்டிச் செல்லும் கால் நடைகள் புல்மேய்ந்தவுடன் மாலையில் கொண்டுவந்து அடைக்கப் படுதற்கென்று ஒரு திறந்த வெளி அமைந்திருக்கும். அது தூய்மையாக வைக்கப்பட்டிருக்காது. ஆடு மாடுகளின் சாணமும் சிறுநீரும் கலந்து, அந்தப் பிரதேசத்தையே துர்நாற்றமாக்கி விடும். ஆயின் வீடுகள் சிதறி இருப்பதால் ஒன்றிற்கொன்று நிறைய இடம்விட்டு அமைந்துள்ளன. ஒவ்வொரு வீட்டிலும் ஒரு முற்றத்தை நோக்கிய பல அறைகளும், கால்நடைகளுக்கென்று இரண்டாவது முற்றமும் அமைந்துள்ளன. இவை திறந்த வெளியிலிருப்பதனாலேயே இங்குக் காற்று வசதி உள்ளதே தவிர அவற்றிற்கென்று சன்னல்களோ வேறு வசதிகளோ கிடையா. ஒவ்வொரு வீட்டையும் அடுத்துப் பழத்தோட்டங்கள் உண்டு. இவை மண் சுவர்களினால் சூழப்பட்டிருக்கும்.

உழவர்கள் இன்னும் நிலப்பிரபுக்களின் கீழ்க் குத்தகைக்காரர்களாகவே இருந்து வருகிறார்கள்.

ஆயினும் நிலங்களின் அளவுக்குத் தகுந்த பெருக்கம் விவசாயிகளிடையே இல்லை. ஆதலால் இங்கிருக்கும் குறைந்த விவசாயிகளைக் கொண்டே நிலப்பிரபுக்கள் தங்கள் நிலங்களைக் கவனித்துக் கொள்ள வேண்டி யிருக்கிறது. ஆகவே இந்நிலச்சுவான்தார்கள் விவசாயிகளிடம் அன்பாகவும், அனுசரணையாகவும் இருந்து வருகிறார்கள். விவசாயிகளும் தங்கள் முதலாளிகளிடம் உண்மையாகவும் நாணயமாகவும் உழைக்கிறார்கள். வேறு வழிகளில் ஏற்றமடையாத ஒரு நாட்டில் விவசாயக் கலையில் மட்டிலும் முன்னேற்றத்தைக் காண்பதென்பது முடியாத காரியம். ஆகவே பெர்சியா நாட்டின் விவசாய முறைகள் பெரும்பாலும் பழைய முறைகளையே அடிப்படை யாகக் கொண்டுள்ளன. உழுதல், விதைத்தல், அறுத்தல், தானியம் சேகரித்தல் ஆகிய யாவும் பழங் கால முறைகளைப் பின்பற்றியே செய்யப்படுகின்றன. விஞ்ஞான முன்னேற்றங்களுக்கும் வாழ்க்கையின் மாற்றங்களுக்கும் இடம் கொடுத்து முன்னேறியிருக் கும் நமக்கு அவர்களுடைய பழைய முறைகளைக் காண வியப்பாக இருப்பினும், நாகரிகம் பரவாத இடங்களில் அவர்கள் அம்முறைகளைக் கைக் கொள்ளுதல் இயல்பேயாகும்.

ஆளும் வகுப்பினரை நோக்குமிடத்து இரு பிரிவினராகக் கொள்ளலாம். ஒன்று, மிராசுதாரர்கள் அல்லது நிலச்சுவான்தார்கள்; இரண்டு சமயக் குழு வினர். இவ்விரு சாராரும் பெருஞ்செல்வந்தர்க ளாகக் காணப்படுகின்றனர். இவர்கள் தங்களுக்கு ஊதியம் கிட்டும் வகையில் சாமான்கள் விற்கும் கடைகளையும் ஏற்று நடத்துகிறார்கள். அன்றியும் நகரத்திலும் கிராமங்களிலும் சிறு கடைகளும் உணவு விடுதிகளும் வைத்து நடத்தும் வியாபாரிகளும் நிறைந்துள்ளனர்.

பெர்சியாவின் வேறு ஒரு தனிச் சிறப்பு அங்கு இருக்கும் நாடோடிகளாவர். இவர்களது முக்கிய நோக்கம் தங்கள் ஆடு மாடுகளுக்குப் புல் தேடிச் செல்வதாகும். இவர்கள் தோல் கூடாரங்களில் தங்கி வசிக்கிருர்கள். இவர்கள் கோடைக் காலத்தை மலேயில் கழித்துவிட்டுக் குளிர்காலத்தில் சம வெளியை நோக்கி வருகின்றனர். இவர்கள் நல்ல உடலுரம் பெற்றவர்கள். இவர்களின் முரட்டுக் கைகளும், கால்களும், பெரிய சிவந்த விழிகளும் கண்டவர்களே அச்சுறுத்தும் தன்மை வாய்ந்தனவாகும். இவர்களுக்கு ஒட்டகங்களின்மீது பிரயாணம் செய்வதிலும், கிராமங்களின் உட்புகுந்து சூறையாடிக் கொள்ளேயடிப்பதிலும் விருப்பம் மிகுதி. இவர்களுடைய சில கொள்கைகள் கேட்பதற்கு விநோதமானவையாகவும் வியப்பளிக்கக்கூடியவையாகவும் இருக்கும்.



பெர்சியாவில் பெண்களேக் காட்டிலும் ஆண்களே மேலான நிலேயில் உள்ளனர். அந்நாட்டில் ஒருவர் ஆண் குழந்தைக்குத் தகப்பன் ஆனுர் என்று தெரிந்தால் அவருக்கு வாழ்த்துக்கள் வந்து குவியும்; பலவிதமான பரிசுகளேயும் கொடுத்துவிட்டுக் குழந்தையையும் பார்த்துச் செல்வர். ஆனுல் பெண் குழந்தை பிறந்து விட்டது என்று தெரிந்தாலோ, ஒருவரும் அவரை நாடமாட்டார்கள். பிறந்த குழந்தைக்குக்குப் பிறர் திருட்டி எனப்படும் கண் பார்வைக் கெடுதல் வராதிருக்கப் பலவித அணிகளேயும் அணிவிப்பார்கள். கழுத்தில் பலவிதமான மணி மாலேகளேயும், கைகளில் காப்பு முதலியவைகளேயும் அணிவிப்பார்கள். குழந்தை இருக்கும் அறையில் கண்ணுடியையோ அல்லது கண்ணுடியின் தொடர்புகொண்ட பொருட்களேயோ எக்காரணத்தைக் கொண்டும் கொண்டுவரக்கூடாது. ஏனெனில்

அவர்கள் கண்ணுடியின் ஒளி குழந்தையின் கண்ணில் பட்டுக் குழந்தையின் பார்வை கெட்டுவிடும் என நம்புகிருர்கள். அவர்கள் 'கண்ணுடி' என்ற வார்த்தையினையே உச்சரிக்கக் கூடாதென்பர். அன்றியும் கறுப்பு நிற ஆடைகளையோ, அங்கிகளையோ அணிந்துகொண்டு குழந்தையைக் காண யாரையும் உள்ளே நுழைய விடமாட்டார்கள். ஏனெனில் அவைகளைக் கண்டு குழந்தை பயந்து விடும் என்பது அவர்களிடையே உள்ள அசைக்க முடியாத ஒரு நம்பிக்கை.

பொதுவாக அவர்கள் குழந்தையைத் துணியால் நன்கு மூடி வைத்திருப்பர். ஆயினும் காற்ருேட்டத்துக்காக வெளியே எடுத்துச் செல்ல விரும்பினுல், மேலும் மெத்தென்ற விரிப்புகள் பல போர்த்தியே வெளியே எடுத்துச் செல்வர். இதுவும் குழந்தைக்கு அயலாரின் கண்திருட்டி படாதிருக்கவே செய்யப் படுகிறது. நண்பர்கள் குழந்தையைப் பார்க்க வந்தால், "மசல்லா" என்று வாழ்த்துவர். "மசல்லா" என்ற வாழ்த்துப் பதத்திற்கு "அல்லாவின் விருப்பம் போல்" என்பது பொருளாகும். அவ்வாறு சொன்னுல் குழந்தைக்கு எந்த விதமான கெடுதியும் நேராது என்பது நம்பிக்கை.

முன்காலத்தில் சிறுவனுக்கு எட்டு வயதானதும் அவனை ஒரு வேலைக்காரன் வசம் விட்டு வைப்பார்கள். முல்லா அல்லது மதகுரு அவனுக்கு எழுதவும் படிக்கவும் கற்றுத் தருவார். முஸ்லிம்களின் வேதப் புத்தகமாகிய குர் ஆனே அவனது பாடப்புத்தகமாகும். குர்ஆன் புத்தகத்திலுள்ள வசனங்களை அரபியிலும் அதன் பொருளைப் பெர்சிய மொழியிலும் அவன் திரும்பத் திரும்பப் படிக்கவேண்டும். கிளிப்பிள்ளை போன்று அவன் சொன்னதையே திரும்பத் திரும்பச்

சொல்லக் கற்பதால் அவன் பெர்சிய மொழியையும் அறியமுடிவதில்லை; அராபிய மொழியையும் அறிவதில்லை. ஆகவே இருமொழிகளிலும் கற்றறிவு ஏற்படுவதில்லை. ஆசிரியரிடம் பயின்ருலும் மதப் பாடசாலைகளில் பயின்ருலும் அவனுக்குக் கல்வி இவ்வாறுதான் கற்பிக்கப்படுகிறது. இதுபோன்ற கல்வியினுல் யாதொரு பயனும் கிடையாது.

சிறுவன் சோம்பேறியானுல் அவன் பாதங்களை ஒரு கம்புடன் சேர்த்துக் கட்டி வைத்துக் கம்பினுல் அடிப்பார்கள். இம்மாதிரித் தண்டனைகளுக்குக் "குச்சிகளைத் தின்பது" என்பது பெயர். மன உணர்ச்சியைத் தெரிவிக்கக் கூடிய எந்தச் செயலும் செய்தல் தகாது என்று கூறப்பட்டன. ஓடுதல், குதித்தல், ஆடுதல் போன்ற தொழில்கள் மரியாதைக்குக் குறைவு கற்பிக்கக்கூடியன என்று சிறுவர்களுக்கு அறிவுறுத்தப்பட்டது. இவ்விதக் கட்டுப்பாடுகளுக்குட்பட்டு வாழும் சிறுவன் அதி விரைவில் ஒரு சிறு மனிதன் ஆகிவிடுகிருன். அவன் இளம் உள்ளத்தில் கிளம்பும் ஆசைகளையும் ஆர்வங்களையும் இந்த விதமான கட்டளைகள் தரைமட்டமாக்கி விடுகின்றன. அவன் நீளமான மேலங்கி அணிந்து இடுப்பிலே கச்சம் கட்டி, தலையில் குல்லா ஒன்று அணிந்து, தன் தகப்பனைப் போலவே காட்சி அளிக்கிருன். அவன் பழக்க வழக்கங்கள் இயற்கைக்கு விரோதமானவைகளாகவும் செயற்கையாகவும் அமைகின்றன. வழியில் யாரேனும் ஒரு நண்பன் அவனை வாழ்த்தினுல், அதற்குப் பதிலாக அவன், "உமது நாசி கொழுப்பதாக," "உமது நிழல் என்றும் குறையாதிருக்க," என்று சொல்லி வாழ்த்துவான். இவையும் பிறவும் பெர்சிய மக்களின் பண்பாட்டுப் பழக்கங்களில் ஒரு பகுதியாகும்.

சிறுவன் பதினாறு வயது அடைந்ததும் தாயத்தார் முறையிலிருந்து அவனுக்கு ஒரு பெண்ணை மணம் செய்துவைக்க அவன் தாய் ஏற்பாடு செய்வாள். குழந்தைப் பருவத்திற்குப்பின் அப்பெண்ணை அவன் பார்த்திருக்கமாட்டான். ஏனெனில் அங்குப் பெண்கள் தனியான முறையில் பிரித்து வைக்கப் பட்டிருக்கிறார்கள். அவர்கள் ஒருவரையும் காணக் கூடாது. வெளியில் செல்லும் போதும் முகத்திற்குத் திரையிட்டே செல்லவேண்டும். மாப்பிள்ளையும் பெண்ணும் சந்தித்து ஒருவர் முகத்தை ஒருவர் கண்ணாடியின் மூலம் கூர்ந்து கவனிப்பர். முடிவில் கொண்டாட்டங்களிடையே பெண்ணைக் கணவன் வீட்டுக்கு அழைத்துச் சென்று, பெண் தன்னுடன் கொண்டு வந்த ரொட்டி வெண்ணெய் மற்றும் உப்பு ஆகியவைகளைச் சேர்த்து இருவரும் உண்பர். பின்னர் இத்தம்பதிகளை உறவினர்கள் தனி மனையில் குடி வைப்பர்.

இம்முறையில் நடைபெறும் திருமணம் பெர்சியாவின் சில பாகங்களில் காணப்படுகிறது. ஆனால் இக்காலங்களில் பெண்களைப் பள்ளிக்கூடத்தில் சேர்ப்பதுமட்டுமின்றி, அவர்கள் நகரங்களில் முகத்திரை யின்றிச் சென்று வருவதால் பழைய திருமண முறை நீடிக்க வகையில்லை.

கல்வியில் அதிக முன்னேற்றம் காட்டியுள்ளது பெர்சியா. தற்கால முறைக் கேற்பப் பல பள்ளிகள் ஏற்பட்டுள்ளன. அவைகளில் கீழ் வகுப்புகளில் சிறுவர்களும், சிறுமிகளும் சேர்ந்து படிக்கிறார்கள். நூற்றுக்கணக்கில் மாணவர்கள் வெளி நாடுகளுக்கு அனுப்பப்படுகிறார்கள். அவ்வாறு செல்பவர்களில் அநேகர் ஆசிரியர்களாகவும் அரசியல் தலைவர்களாகவும் திரும்பி வருகின்றனர். டெகரானில் ஒரு பல்கலைக் கழகம், விஞ்ஞானம் மற்றும் கலைகளின்

எல்லாத் துறைகளிலும் மேற்படிப்பை அளித்து வருகிறது.

ஒவ்வொரு முஸ்லிம் நாட்டிலும் உள்ளதைப் போன்றே, பெண்களின் நிலே பெர்சியாவிலும் ஆண்களின் நிலேயைக் காட்டிலும் தாழ்ந்துள்ளது என்று கூறிஞேம். பெர்சிய நாட்டு முஸ்லிம்கள் பெண் கல்வி, பெண்கள் முன்னேற்றத்திற்கு வழி வகைகள் செய்யாதது மட்டுமின்றி அவர்களுக்குப் பல கட்டுப் பாடுகளேயும் விதித்துள்ளனர். இதனுல் பெண்களில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் மிகக் குறைந்த எண்ணிக்கையினரே ஆயினர். அன்றியும் அவர்கள் தங்களேப் பலவிதமான பழக்க வழக்கங்கட்கு உட்படுத்திக்கொண்டு, கனத்த முகத் திரையிட்டே வெளியில், செல்கின்றனர். பணக்காரக் குடும்பங்களில் பெண்களுக்கு 'அந்தேரன்' என்று சொல்லப் படும் கன்னிமாடங்கள் ஒதுக்கப்படுகின்றன. அதில் நெருங்கிய உறவினர்கள் தவிர அந்நியர்கள் நுழைவதில்லே. இந்தப் பழக்கங்களேத் துருக்கி தேசம்தான் முதலில் உதறித் தள்ளியது. பெர்சியா அதை மெதுவாகப் பின்பற்றி வருகிறது. இன்று ஒரு பெர்சியப் பெண்மணி நாடக மன்றங்களுக்கும் சினிமாக் கொட்டகைகளுக்கும் முகத் திரையின்றியே சென்று வரலாம். மேலும் பெண்களும் ஆண்களும் மேல் நாட்டு முறைகளேப் பின்பற்றுவதில் அரசாங்கமும் ஆதரவு காட்டுகிறது. பெர்சியாவில் பழையன ஒழிந்து, புதியன புகுந்து சிறந்து விளங்குவதற்கு 1925 முதல் 1941 வரை அரசராக இருந்த **ரிஸா கான்** என்பவரின் பெருமுயற்சியே காரணமாகும். இவரது வரலாறு மனங்கவரக் கூடியதாகும். எளிய குடியிற் பிறந்த இவர் பெர்சிய இராணுவத்தில் ஒரு போர் வீரராகத் தம் வாழ்க்கையை ஆரம்பித்தார். தமது திறமையாலும் உண்மை உழைப்பாலும் இவர் படிப்

படியாக உயர்ந்து, கடைசியாக இராணுவத் தளபதி யானர். 1921 பிப்ரவரியில் 2000 காசக் அணி களுக்குத் தலைவராய் இருந்த இவர் பெர்சிய மந்திரி சபையை முறியடித்தார். பின்னர் ஷாவினல் ஏற் படுத்தப்பட்ட புது மந்திரி சபையில் இவர் இராணுவ மந்திரி ஆனர். 1925 இல் ஷா அகமது முடி யிழந்த பின், ரிஸா கான் புதிய ஷா ஆனர்.

**உமர்கயாம்** என்ற சிறந்த புலவர் வாழ்ந்த இந்த மத்தியக்கிழக்கு நாடு, நேசநாடுகளுக்கு ஒரு தரைப் பாலமாய் அமைந்திருந்தது. ஈரானின் தலைநகரான டெகரானில் தான் 1943 நவம்பரில் வரலாற்றில் இடம் பெற்ற நேசநாடுகளின் கூட்டம் நடைபெற் றது. அதில் அமெரிக்க ஐக்கிய நாடுகள், பிரிட்டன், சோவியத் நாடுகள் இவைகளின் தலைவர்கள், தங் கள் கொள்கைகளை வகுத்தற் கிடையில் ஈரானின் சுதந்திரத்திற்கும் வாக்குக் கொடுத்தனர்.

ஈரான் கிழக்கையும் மேற்கையும், ஒன்றுபடுத் திக் காட்டுகிறது. பழங்கால வழிகளையும், இயந் திரக் காலத்தின் நவீன முறைகளையும் தன்னுள் கொண்டிருக்கிறது. **'ட்ரான்ஸ் ஈரானியன் இரயில்வே'என்று** சொல்லப்படும் வண்டித் தொடர், ஆயிரங்காலத்து அடித்தளத்தின் மேல் அமைந்துள்ள சுட்ட மண் வீடுகள் அமைந்த கிராமங்களின் வழியே ஓடுகிறது. அதன் வழியில் அது 200க்கு மேற்பட்ட குகை களுக்குள் புகுந்தும் ஆயிரக்கணக்கான பாலங் களைக் கடந்தும் செல்லுகிறது. சில இடங்களில் அது மூன்று வெவ்வேறு தரை மட்டங்களில் காணக் கூடியபடி அவ்வளவு நெருக்கமாக வளைந்து செல் கிறது. இருந்தபோதிலும் ஈரான் இன்னும் பழைய கீழ் நாடுகளின் சுவையையே சுவைத்துக் கொண் டிருக்கிறது. மலைச்சரிவில் தனியே திரியும் இடையன் முதல் கிழக்கத்திய கைவினைப் பொருள்களுக்காகப்

பேரம் பேசும் தாடிக்கார வணிகர்கள் நிறைந்த மூடப்பட்ட கடைத் தெருக்கள் வரை ஈரானில் பழைய கீழ் நாட்டு மணமே இன்றும் வீசுகிறது. மேலே விமானங்கள் பறக்க, கீழே தன் கையின் மேல் வேட்டைப் பறவை வல்லூறு இருக்க, ஒரு நாடோடி மகன் ஆவலுடனும் மரியாதை யோடும் அண்ணாந்து பார்க்கிருன். ஈரானியப் பெண்களின் அமைதியான திரையிட்ட வாழ்க்கை யும், மதுபானமும் நாய்களும் முஸ்லிம் மதத்திற்கு விரோதமானவை என்பதும், அவர்களது வந்தனை வழிபாடுகளும் உண்ணுவிரத முறைகளும் ஆகிய அவர்களின் பழக்கவழக்கங்கள் நமக்கெல்லாம் புதுமையானவையாகும். இத்துணைப் பெருமை வாய்ந்த பெர்சியா நாடு இன்னும் விரைவில் பல மாறுதல்களையும் முன்னேற்றங்களையும் பெற்று உலக நாடுகளில் சிறந்த தொன்ருக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

# 3. சீனு

பழமையான நாகரிகம் வாய்ந்த நாடுகளில் சீனுவும்ஒன்ருகும். பல்லாயிரம் ஆண்டுகளாகச் சீனு வின் நாகரிகமும், கலேயும், கைத்தொழிலும் சிதைந்து போகாமல் காப்பாற்றப்பட்டு வந்திருக் கின்றன. எகிப்தில் நாகரிகத்தின் வளர்ச்சி துவங் கிய காலேயிலேயே சீனு உன்னத நாகரிக நிலேயில் இருந்திருக்கிறது. இத்தகைய பழமையான நாக ரிகச் சிறப்புடைய நாட்டில் வாழும் மக்கள் மங் கோலிய இனத்தைச் சேர்ந்தவர்கள். ஏறக்குறைய ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் மத்திய ஆசியா யாவிலிருந்து சில இனத்தவர்கள் சீனுவின் மீது படையெடுத்து வந்தார்கள். அவர்கள் அங்கு ஏற் கெனவே வாழ்ந்துவந்த மக்களுடன் போரிட்டு அவர்களே மேற்கேயுள்ள மலேகளுக்கும், காடுகளுக் கும் துரத்திவிட்டார்கள். சீனுவின் ஆதிகுடிகளின் கால்வழியில் வந்தவர்கள் இன்றைக்கும் யூனுன் பகுதியில் வாழ்கிருர்கள்.

சீனுவின் வரலாறு :

சீனுவின் வரலாறு மிகவும் நீண்டது. பல்லா யிரம் ஆண்டுகளேத் தன்னகத்தே கொண்டு சீனு வின் பெருமையைப் பறைசாற்றி நிற்பதொன்ருகும். சீனுவின் பழம் நாகரிகத்தையும், கலேச்சிறப்பையும், மக்கள் வாழ்க்கையையும் பற்றி அறிவதென்ருல் அந்நாட்டின் பழைய வரலாற்றைச் சிறிது அறிவது அவசியமாகும். இந்தியாவைப் போலவே சீனுவும் ஒரு விவசாய நாடாகும். ஆதியில் சீனுவில் குடியேறிய மக்களும் நன்கு விவசாயத்தை அறிந் திருந்தனர். அவர்கள் சமூகம் நல்ல வளர்ச்சி யடைந்திருந்தது. அவர்கள் முதன் முதலில் மஞ்சள்

நதி என்றழைக்கப்படும் ஹொயங்-ஹோவுக்கு அருகில் குடியேறித் தங்கள் இராச்சியத்தை அமைத்தார்கள்.

அவர்கள் பல நூற்றுண்டுகளாகச் சீனு முழுமையும் பரவி நாகரிகத்திலும், கலையிலும், கைத்தொழில்களிலும் வளர்ந்து வந்தார்கள். இவ்வாறு நாகரிகத்தில் வளர்ந்து வந்த மக்களுக்குப் பல தலைவர்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் அரசனுனன். நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக **யோ** என்னும் பெயருடைய ஒருவன் தன்னைச் சக்கரவர்த்தி என்று சொல்லிக்கொண்டான். யோவுக்குப் பின்னர் அவன் மகன் பட்டத்திற்கு வரவில்லை. அவன் அக்காலத்தில் யாவரினும் சிறந்தவனுகக் கருதப்பட்ட ஒருவனை மன்னன் ஆக்கினுன். அவன் வழிவந்தவர்கள் சீனுவை நானூறு ஆண்டுகளுக்கு மேலாக ஆண்டனர். அந்த மன்னர்கள் **இசையா வமிசத்தைச்** சேர்ந்தவர்கள் என்று அழைக்கப்பட்டனர்.

**சாங் அல்லது இன் வமிசம் :**

இசையா வம்ச வழியில் வந்த கடைசி மன்னன் கொடுங்கோலனுக இருந்தமையால் மக்கள் கிளர்ச்சி செய்து அவனை ஒழித்தார்கள். அதற்கு பின்னர்ச் சாங் அல்லது **இன்** வமிசவழியில் வந்த மன்னர்கள் சுமார் அறுநூறு ஆண்டுகளுக்கு மேலாகச் சீனுவை ஆண்டனர். அதுவும் அழிந்தது. அதன் பின்னர்ச் **சௌ** வமிசம் என்ற ஒரு புதிய வமிசம் எண்ணூறு ஆண்டுகளுக்கு மேலாகச் சீனுவை ஆட்சி புரிந்தது. இந்த ஆட்சியில்தான் சீன அரசாங்கம் நன்கு அமைக்கப்படலாயிற்று. இவர்கள் காலத்தில்தான் சீனுவின் இருபெரும் தத்துவ ஞானிகளான **கன்பூசியஸ், லௌ-ட்சே** என்பவர்கள் வாழ்ந்தனர்.

**சீனு-பெயர்க்காரணம் :**

சௌ வமிசத்தவர் காலத்தில் சீனுவின் மத்திய அரசு சீர் குலையலாயிற்று. பல சிற்றரசர்கள் மத்திய அரசுக்கு அடங்காமல் சுதந்தரமாக இருக்க விரும்பினர். உள்நாட்டுச் சண்டை இதனுல் பெருகிற்று. இறுதியில் இச் சிற்றரசர்களில் ஒருவனுன **சின்** என்பவன் பழைமை பொருந்திய, ஆனுல் வலிவு குன்றிய, சௌ வமிசத்தை ஒழித்து விட்டுத் தனது புதிய வமிசத்தை ஏற்படுத்தினுன். அவனது வழி வந்தவர்கள் **சின்வமிசத்தவர்** என்று அழைக்கப்படுகிறுர்கள். **சீனு என்னும் பெயர் சின் என்பதிலிருந்து பிறந்ததாகும்.**

சின் வமிச வழி வந்த மன்னர்களில் சிறந்தவன் **வங்-சங்** என்பவன். இவன் காலத்தில் சீனு பெரிதும் முன்னேற்றமடைந்தது. இவன் தன் பெயரை மாற்றி ஷி உவாங் டி என்று வைத்துக் கொண்டான். அதன் பொருள் **முதல் சக்கரவர்த்தி** என்பதாகும். அவன் கடந்த காலத்தை ஒரு பொருட்டாக எண்ணுமல் தன்னையும், தான் வாழ்ந்த காலத்தையும் உயர்வாக எண்ணினுன். மக்கள் கடந்த காலத்தை அடியோடு மறந்து விடவேண்டுமெனவும், ஒப்பற்ற முதற்சக்கரவர்த்தியாகிய தன் காலத்திலிருந்தே சீன வரலாறு துவங்கவேண்டுமெனவும் விரும்பினுன். தனக்கு முன் இரண்டாயிரம் ஆண்டுகளாகச் சீனுவைப் பல மன்னர்கள் ஆண்டு வந்தார்கள் என்னும் உண்மையை அவன் பொருட்படுத்தவில்லை. அவர்களுடைய நினைவையே நாட்டிலிருந்து அறவே ஒழித்து நீக்க அவன் எண்ணினுன். பழங்காலத்துச்சக்கரவர்த்திகளைமட்டுமல்ல, பழைய காலத்து மகான்களையும் மக்கள் மறந்துவிடவேண்டுமென்பதே அவனுடைய நோக்கம். எனவே பழைய வரலாறுகளைக் கூறும் எல்லா நூல்களையும்,

முக்கியமாகக் கன்பூசியஸ், லௌ-ட்சே போன்ற பெரும் தத்துவ ஞானிகளின் நூல்களையும் எரித்து ஒழித்துவிடவேண்டுமென ஆணை பிறப்பித்தான். ஆனுல், மருத்துவக் கலை, விஞ்ஞான நூல்கள் மட்டும் இவ்வாணைக்கு விலக்காக இருந்தன.

"பழைமையைப் பாராட்டித் தற்காலத்தைப் பழிப்போரை அவர்களுடைய சுற்றத்தாருடன் கொன்று குவிப்பேன்," என்பது அவனுடைய மொழிகள். அவன் கூறியவாறே செய்தும் முடித்தான். நூல்களின் மீதுள்ள தணியா அன்பினுல் அவற்றை மறைக்க முயன்ற பல அறிஞர்கள் உயிருடன் புதைக்கப்பட்டனர். தன் காலத்திலிருந்தே சீன வரலாறு துவங்கவேண்டுமெனவும், தன் வழி வருபவர்களே சீனுவை ஆளவேண்டுமெனவும் எண்ணி ஷி உவாங் டி மேற்கொண்ட கொடுஞ் செயல் அநாகரிகமானது என்பதில் ஐயமில்லை. ஆனுல் அதன் முடிவு என்னவெனில் அவன் சாதித்தனவும், அவன் எண்ணங்களும் அவனுடனேயே அழிந்தன. அவனுக்குப் பின் அவன் வழிவந்த மன்னர்கள் சீனுவை எவரும் ஆளவில்லை. சீனுவை ஆண்ட சீன வம்சங்களுக்குள்ளேயே சின் வமிச ஆட்சிக்காலமே மிகவும் குறைந்ததாகும். ஷி உவாங் டி சீனுவை ஆண்ட மன்னர்களுக்குள்ளேயே மிகவும் வல்லமை வாய்ந்தவன். அவன் சிற்றரசர்கள் பலரையும் அடக்கிச் சீனுவின் வல்லமை மிகுந்த மத்திய அரசாங்கத்தை உருவாக்கினுன். அவன் காலத்திலும், அதற்கு முன்னரும் சீனு அடிக்கடி பல நாடோடி இனத்தவரால் தாக்கப்பட்டு வந்தது. மத்திய ஆசியாவையும், மங்கோலியாவையும் சேர்ந்த நாடோடி இனத்தவர்களுடன் சீனு இடைவிடாது போரிட வேண்டியிருந்தது. இவர்களிடமிருந்து சீனுவைக் காப்பாற்றிக்கொள்ளச் சீனப் பெருஞ்சுவரைக்

கட்ட ஆரம்பித்தவன் இவனே. அதைக் கட்டி முடிக்க, கணக்கற்ற பொருள் செலவாயிற்று. ஆனால் சீனர்கள் தங்களை வெளிநாட்டாரின் படையெடுப்பினின்றும் காத்துக் கொள்வதற்கு ஒரு நிரந்தரமான சேனையை வைத்துக் கொள்வதைக் காட்டிலும் எவ்வளவு பொருள் வேண்டுமாயினும் செலவழித்து அந்தப் பெருஞ்சுவரைக் கட்டிவிடுவது நன்மையாயிருக்கும் என்று எண்ணினார்கள். உண்மையில் பெரிய படையெடுப்புக்களை அந்த மதில் தடுத்து நிறுத்தவில்லையாயினும், சிறியபடையெடுப்புக்களைச் சமாளிக்கப் பயன்பட்டது.

ஹான் வமிசம் :

சின் வமிசத்துக்கு அடுத்ததாகச் சீனாவை நானூறு ஆண்டுகளுக்கு மேலாக **ஹான் வமிசம்** ஆண்டது. இவ்வமிசத்தில் சீனாவை ஒரு பெண் சக்கரவர்த்தினி ஆண்டதாகத் தெரிகிறது. அதனால் அக்காலத்திலேயே சீனப் பெண்கள் நல்ல நிலையில் இருந்தார்கள் என்பதை நாம் அறிய முடிகிறது. இவ்வமிச வழியில்வந்த ஆறுவது மன்னனின் பெயர் **வூடி** என்பது. சீனாவை வல்லமையுடனும், புகழுடனும் ஆண்ட மன்னர்களில் இவனும் ஒருவன். வடக்கேயிருந்து அடிக்கடி படையெடுத்து வந்து தொந்தரவு கொடுத்த **தார்த்தாரி**யரை இவன் அடக்கினான். கிழக்கே கொரியாவிலிருந்து மேற்கே காஸ்பியன் கடல்வரையில் இவன் தனியாட்சி செய்தான். மத்திய ஆசியாவில் வாழ்ந்து வந்த எல்லா இனமக்களும் இவனுக்கு அடிபணிந்து நின்றார்கள். இவன் காலத்தில் சீனா உரோமாபுரியுடன் தொடர்பு கொண்டிருந்தது.

ஹான் வமிசத்தாரின் ஆட்சிக் காலத்தில்தான் பௌத்த மதம் சீனாவுக்கு வந்தது. கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரே அதைப்பற்றிச் சீனர்கள் கேள்விப்

பட்டிருந்தார்கள். அக்காலத்தில் சீனச் சக்கரவர்த்தியாக இருந்தவர் ஒரு விந்தையான கனவு கண்டாராம். அவருடைய கனவில் பதினறு அடி உயரமுள்ள ஒரு திவ்ய மனிதர் ஒளிவட்டம் சூழ்ந்த முகத்தோடு தோன்றினராம். இக்காட்சியை அவர் மேற்கே கண்டதால் அத்திக்கிற்குத் தூதுவர் சிலரை அனுப்பினர். அவர்கள் சென்று புத்தர் சிலை ஒன்றையும், புத்தருடைய அறிவுரைகளையும் கொண்டு வந்தார்கள். பௌத்த மதத்தோடு இந்தியக் கலைகளும் சீனவுக்குள் புகுந்தன.

ஹான் வமிச ஆட்சியில்தான் சீனர்கள் முதன் முதலில் மரக்கட்டைகளில் உருவங்களும், எழுத்துக்களும் செதுக்கி அச்சடிக்கும் முறையைக் கண்டு பிடித்தனர். ஆனல் ஆயிரம் ஆண்டுகள் வரை அது பழக்கத்திற்கு வரவில்லை. இவ்வமிச ஆட்சிக் காலத்திலே நல்ல கல்வியறிவு உடையவர்க்கும், சில குறிப்பிட்ட நூல்களில் தேர்ச்சி பெற்றவருக்குமே அரசாங்க உயர் பதவிகள் அளிக்கும் முறை வழக்கத்திற்கு வந்தது.

கி. பி. மூன்ரும் நூற்ருண்டில் ஹான் வமிசம் முடிவுற்றது. சீனப் பேரரசு மூன்று தனி இராச்சியங்களாக இருந்து அதற்குப் பின்னர்ப் பிரிந்து விடுகிறது. சீனு சில நூற்ருண்டுகள் வரை இவ்வாறு ஆளப்படுகிறது. அக்காலத்திலும் அதன் கலையும், நாகரிகமும் நிலை குலையாமல் வளர்ந்து வந்தன. வடக்கேயிருந்து வந்த தார்த்தாரியரின் தாக்குதல்கள் சீனக் கலைவளர்ச்சியைப் பாதிக்கவில்லை. இக்காலத்தில் பெரிய நூல் நிலையங்களும், அரிய நூல்களும் உருவாயின.

**இந்திய-சீனு உறவு :**

பௌத்த மதம் இந்தியாவிலிருந்து சீனவுக்குக் கொண்டு செல்லப்பட்ட பின்னர், இரு நாடுகளுக்

கிடையேயும் உறவு வளர்ந்தது. இந்தியா உயர்ந்த ஆடைகளையும் வேறு பல பொருட்களையும் அனுப்பியதோடு தன் மதத்தையும், கலையையும், அறிவையும் சீனவுக்கு அனுப்பி வந்தது. பல பௌத்த மத போதகர்கள் இந்தியாவிலிருந்து சீனவுக்குப்போனர்கள். அவர்கள் தங்களுடன் இந்தியாவின் கலைச் செல்வங்களையும் கொண்டு சென்றார்கள். அவர்களுடன் இந்தியக் கலைவினைஞரும், தொழில் வினைஞரும் சென்றனர். பௌத்த மதத்தின் வருகையும், இந்தியாவிலிருந்து சென்ற புதிய கருத்துக்களும், ஏற்கனவே சிறந்த நாகரிகம் பெற்று விளங்கிய சீனவில் பெரும் பலனை விளைவித்தன. இதனுல் இந்தியாவின் மதமும், கலையும், அறிவும் ஒரு பிற்போக்கான நாட்டிற்குச் சென்று அதை ஆட்கொண்டன என்று கூறுவதற்கில்லை. இவை சீனவில் அதன் பண்டைய கலைஞானங்களோடு மோதவேண்டி இருந்தது. இதன் விளைவாக இவ்விரண்டினும் மாறுபட்ட சிந்தனை ஒன்று பிறந்தது. அதில் இந்தியச் சாயல் நிறைந்திருந்ததாயினும் அது சீனத் தன்மை வாய்ந்ததாகவும், சீன முறையில் உருவாக்கப்பட்டதாகவும் இருந்தது. இவ்வாறு இந்தியாவிலிருந்து சென்ற அறிவுச் சுடர் சீனவைக் கலைத்துறையிலும், அறிவுத் துறையிலும் தட்டி எழுப்பியது.

சீனவில் பௌத்த மதம் பரவியதைக் கண்டு இந்தியாவில் பௌத்தமதத் தலைவராக விளங்கிய **போதி தர்மன்** என்பவர் தென்னிந்தியாவிலிருந்து கடல் மார்க்கமாகப் புறப்பட்டுச் சீனவிலுள்ள காண்டனுக்குச் சென்றார். அக்காலத்தில் **லோயாஸ்** என்னும் சீன மாகாணம் ஒன்றில் மட்டும் மூவாயிரம் இந்தியத் துறவிகளும், பத்தாயிரம் இந்தியக் குடும்பங்களும் இருந்ததாகச் சொல்லப்படுகிறது.

ஷான் வமிச காலத்திலேயே சீனுவில் மக்கள் தொகை (Census) கணக்கிடப்பட்டதாம். அப்போது தனி மனிதர்களை எண்ணுமல் குடும்பம் குடும்பமாக எண்ணிக் கணக்கெடுக்கப்பட்டது. ஒவ்வொரு குடும்பத்திற்கும் சராசரி ஐந்துபேர் வீதம் கணக்கிட்டுப் பார்த்தால் கி. பி. 156ல் சீனுவின் மக்கள் தொகை ஐந்து கோடி எனத் தெரிந்தது. இது எவ்வளவு தூரம் சரியானது என்று சொல்வதற்கில்லையாயினும், இக்காலத்திய ஜனக்கணிப்பு வழக்கம், சீனுவில் அப்போதே கையாளப்பட்டது என்பதை அறியும் போது நமக்கு வியப்பாக இருக்கிறதல்லவா ?

**டாங் வமிசம் :**

மூன்று பிரிவுகளாகப் பிரிந்துபோன சீனப் பேரரசைக் கௌட்சு என்னும் சக்கரவர்த்தி ஒன்று படுத்திய தோடல்லாமல் தெற்கே அன்னும், கம்போடியா வரையிலும், மேற்கே பாரசீகம், காஸ்பியன் கடல் வரையிலும் தம் ஆட்சியை விரிவு படுத்தினர். இம்மன்னர் வழி வந்தவர்கள் டாங் வமிசத்தினர் என்று அழைக்கப்படுகின்றனர். **சி-அன்-பு** என்னும் நகரம் இந்தப் பேரரசின் தலைநகரமாக இருந்தது. சீனுவின் கலைகளையும், தத்துவ ஞானத்தையும், நாகரிக முறைகளையும் கற்றுக்கொண்டு போவதற்கு அறிஞர் பலர் ஜப்பானிலிருந்தும், கொரியாவிலிருந்தும் வந்தனர். டாங் மன்னர்கள் அயல் நாடுகளிலிருந்து சீனுவுக்கு வருவோருக்கும், அயல்நாட்டு வர்த்தகத்திற்கும் பெரும் ஆதரவு அளித்தனர். அயல் நாடுகளிலிருந்து வந்து குடியேறியவர்களுக்கெனத் தனிச்சட்டங்கள் இயற்றப் பட்டன. கி.பி. 300 ல் முதன் முதலாக அராபியர் சீனுவில் குடியேறினர். இந்த அராபியரின் உதவியால் வெளிநாடுகளுடன் கப்பல் வாணிகம் விருத்தி

யடைந்தது. சீனத் துறைமுகங்களிலிருந்து சீனக் கப்பல்களும், அராபியக் கப்பல்களும் பண்டங்களை ஏற்றிச் சென்றன.

டாங் வமிச ஆட்சியின் துவக்கத்தில் கிறிஸ்தவ மதமும், இஸ்லாம் மதமும் சீனுவில் நுழைந்தன. மேல்நாடுகளில் நாத்திகர் என்று ஒதுக்கப்பட்டுத் துரத்தப்பட்ட ஒரு பிரிவினரால் கிறிஸ்தவ மதம் சீனுவுக்குக் கொண்டு வரப்பட்டது. அவர்களுக்கு **நெஸ்தோரியர்** என்று பெயர். நெஸ்தோரியர்கள் வருவதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்பே, இஸ்லாத்தை உருவாக்கிய முகம்மதுநபி உயிர்வாழ்ந்திருந்த காலத்திலேயே இஸ்லாம் சீனுவுக்கு வந்துவிட்டது. சீனச் சக்கரவர்த்திகள் இரு மதத்தினரையும் ஆதரவுடன் வரவேற்று அவர்கள் கூறியவற்றைக் கவனத்துடன் கேட்டனர். இரு மதத்தினருடைய கொள்கைகளையும் அவர்கள் பாராட்டியதோடு, இருவருக்கும் விருப்பு வெறுப்பற்ற வகையில் ஆதரவு காட்டினர். காண்டனில் ஒரு மசூதி கட்டிக் கொள்ள அராபியருக்கு அனுமதியளிக்கப்பட்டது. 1300 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட அந்த மசூதி இன்னும் உள்ளது. உலகில் உள்ள பழைய மசூதிகளில் இதுவும் ஒன்ருகும். இவ்வாறே கிறிஸ்தவ மாதாகோவில் ஒன்று கட்டிக்கொள்ளவும், மடம் ஒன்று கட்டிக்கொள்ளவும் கிறிஸ்தவர்களுக்கு அனுமதி யளிக்கப்பட்டது.

டாங் வமிச காலத்தில்தான் சீனர்கள் காகிதம் செய்யும் முறையைக் கண்டு பிடித்தனர். பின்னர்ச் சீனர்கள் வாயிலாக அராபியர்கள் அக்கலையைப் பயின்றனர். டாங் வமிசத்தினர் முந்நூறு ஆண்டுகள், அதாவது, கி. பி. 907 ஆம் ஆண்டுவரை சீனுவை ஆண்டனர். இம் முந்நூறு ஆண்டுகள் சீனுவின் மிகப் பெரிய காலம் என்று சிலரால் கருதப்படுகிறது. அக்காலத்தில் மக்கள் உயரிய நாகரிகம்

பெற்றிருந்ததோடு, மிக்க மகிழ்ச்சியான வாழ்க்கையும் நடத்தி வந்தார்கள். காலக்கிரமத்தில் டாங் வமிசத்தில் திறனற்ற மன்னர்கள் தோன்றினுர்கள். அவர்கள் தங்கள் நலனிலும், இன்ப வாழ்விலும் நாட்டம் செலுத்தினரேயன்றி, மக்கள் நலனில் கிஞ்சித்தும் அக்கறை கொள்ளவில்லே. இதனுல் மக்களிடையே அதிருப்தி வளர்ந்தது. பத்தாம் நூற்ருண்டின் துவக்கத்தில் டாங் வமிசம் வீழ்ச்சியுற்றது.

**சூங் வமிசம் :**

டாங் வமிசத்திற்குப் பின்னர் ஐம்பது ஆண்டுகள் வரை சீனுவைப் பல சிற்றரசர்கள் ஆண்டனர். அதன் பின்னர்க் கி. பி. 960ல் மற்ருெரு பெரிய வமிசம் சீனுவை ஆளத் தொடங்கியது. இதற்கு **சூங் வமிசம்** என்று பெயர். இவ்வமிசத்தைத் தோற்றுவித்தவன் கௌட்சு என்னும் மன்னனுவான். இவன் ஆட்சிக்காலத்தில் எல்லேப் புறங்களிலும் உள் நாட்டிலும் தொந்தரவு இருந்து வந்தது. மக்கள் தங்களே வருத்திய வரிச்சுமையைப் பெரிதும் வெறுத்து வந்தனர். டாங் வமிசம் வீழ்ச்சியுற்றதன் காரணம் அது அவசியமான மாறுதல்களேச் செய்யாததுதான். இதே காரணத்தால் சூங் வழி மன்னர்களும் அல்லல்பட்டு வந்தனர்.

வாங்-ஆன்-ஷி என்பவன் சூங் வமிச ஆட்சிக் காலத்தில், பதினேராம் நூற்ருண்டில் முதன் மந்திரியாக இருந்தான். அக்காலத்தில் சீனு கன்பூஷியஸ் என்ற தத்துவஞானியினுடைய கொள்கைகளுக்கு ஏற்ப ஆளப்பட்டு வந்தது. கன்பூஷியஸ் கூறிய விதிகளே மீறி நடக்கும் துணிவு எவருக்கும் இல்லே. ஆனுல் வாங்-ஆன்-ஷி அதற்கு எதிராகச் செல்லவில்லேயாயினும், அவரது கொள்கைகளுக்குப் புதிதாக விளக்கம் செய்தான். அவை வியக்கத்தக்க

வகையில் தற்காலக் கொள்கைகளுக்கு ஒத்துள்ளன. வாங்-ஆன்-ஷீயின் முழு நோக்கமும் இது தான். "கொடுக்கச் சத்தியற்ற ஏழைகள் மீதுள்ள வரிப் பளுவைக் குறைத்து, கொடுக்கச் சத்தியுள்ள தன வந்தர்களின் மீது அதை விதிக்க வேண்டும்" என்பதாகும். எனவே வாங்-ஆன்-ஷி நிலவரியைக் குறைத்தான். விவசாயிகள், தங்கள் வரியைப் பண மாகச் செலுத்துவது கடினமாக இருந்தால், அதைத் தானியமாகவும் கொடுக்கலாம் என அனுமதித்தான். செல்வந்தர்களுக்கு வருமான வரி விதித்தான். விவசாயிகளுக்கு அரசாங்கம் கடன் கொடுத்து உதவ வேண்டுமெனவும், அறுவடைக் காலத்தில் அதைத் திருப்பித் பெற்றுக் கொள்ளலாமெனவும், ஏற்படுத்தினான். அரசாங்கமே விளை பொருட்களை வாங்கி விற்பனை செய்வதால் விலைவாசிகள் ஏற இறங்க ஒட்டாமல் கட்டுப்படுத்தலாம் என்று சொன் னான். பொது மராமத்து வேலைகளுக்கு யாரிடமும் கட்டாயப்படுத்தி வேலை வாங்கக் கூடாது என்று விதி அமைத்தான். உழைக்கும் ஒவ்வொருவருக்கும் அவ் வுழைப்பின் முழுக் கூலியும் தரப்படல் வேண்டு மெனச் சட்டம் அமைத்தான். அவன் நிரந்தரப் படை ஒன்றையும் நிறுவினான். அதற்குப் **பாச்சியா** என்று பெயர். இவ்வாறு வாங்-ஆன்-ஷி செய்த சீர்திருத்தங்கள் மக்கள் நலனுக்கு மிகவும் ஏற்றவை யாக இருப்பினும், அவன் காலத்தை நோக்கும் போது, அவை மிகவும் முற்போக்குள்ளவையாக இருந்தன. ஆகவே, சிறிது காலத்திற்குப் பிறகு அவை வழக்கொழிந்து போயின. ஆயினும், அவன் நிறுவிய பாச்சியா மட்டும் எண்ணூறு ஆண்டுகள் வரையில் தொடர்ந்து இருந்து வருகிறது.

வடக்கிலும் தெற்கிலும் ஆட்சிபுரிந்த சூங் வமி சத்தார் அவர்களுக்கு முற்பட்ட டாங் வமிசத்தாரைப்

போல் அவ்வளவு பலமுடையவர்களாக இல்லை. ஆனால், டாங் ஆட்சியின் போது செழித்தோங்கிய உன்னதமான கலைப் பரம்பரையை அழிந்து போகாமல் காப்பாற்றியதோடு அதை அபிவிருத்தியும் செய்தார்கள். சூங் மன்னர்களின் ஆட்சியில் தென் சீனு கலையிலும், கவிதையிலும் சிறப்புற்று விளங்கியது. சூங் கலைஞர்கள் இயற்கை அழகில் பெரிதும் ஈடுபட்டவர்கள். அழகிய இயற்கைக் காட்சிகள் கொண்ட பல அருமையான ஓவியங்கள் அக்காலத்தில் தீட்டப்பட்டன. அவர்கள் காலத்தில்தான் பீங்கான் மண் (ஒருவிதக் களிமண்) கண்டெடுக்கப்பட்டது. பீங்கானில் சூங் கலைஞர்கள் அழகிய பல உருவங்களை வடித்தெடுத்ததுடன், அன்றாட உபயோகத்திற்காகப் பலவகைப் பாண்டங்கள் சித்திர வேலைப்பாடுகளுடன் செய்யப்பட்டன.

**சீனுவுக்குள் மங்கோலியர் வருகை :**

சீனுவுக்கு வடக்கேயிருந்து படையெடுத்து வந்த காட்டுமிராண்டிகளான **கித்தானியர்** என்னும் இனத்தவரை சூங் மன்னர்களால் ஒடுக்க முடியவில்லை. அவர்களை வெற்றிகாண இன்னெரு இனத்தவரின் உதவியை அவர்கள் நாடினர். வடமேற்கில் வாழ்ந்த அவர்களுக்கு **கினியர்** அல்லது **பொன்னிறத் தார்த்தாரியர்** என்று பெயர். பொன்னிறத் தார்த்தாரியரின் உதவி கொண்டு சீன மன்னர் கித்தானியரை ஓட்டினர். ஆனால் பொன்னிற தார்த்தாரியர்கள் அதன் பின் சீனுவை வீட்டு நீங்காது அங்கேயே தங்கிவிட்டார்கள். அவர்கள் வட சீனுவைத் தங்கள் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வந்து, பீகிங் நகரைத் தங்களுக்குத் தலைநகராக்கிக் கொண்டார்கள். சூங் வமிசத்தார் தெற்கே சென்றுவிட்டார்கள். பொன்னிறத் தார்த்தாரியர்கள் முன்பு சூங் வமிசத்தவர் ஒளி மங்கி வந்தது. ஆகவே வட

சீனுவில் கின் **பேரரசும்**, தென் சீனுவில் **சூங் பேரரசும்** உருவாயின.

இவ்வாறு சீனு இரண்டு பேரரசுகளாக ஆளப்பட்டுவந்த சமயம், மேற்கே இருந்து **மங்கோலியா** இனத்தைச் சேர்ந்தவர்கள் படையெடுத்து வந்தனர். நாடோடிக் கூட்டத்தைச் சேர்ந்த அவர்கள் மிக்க போர்த்திறன் வாய்ந்தவர்களாக இருந்தனர். அவர்களைத் தலைமைதாங்கி நடத்தி வந்தவன் **செங்கிஸ்கான்** என்பவன் ஆவான். இவன் மிக்க போர்த் திறம் வாய்ந்தவன். இவன் வட சீனு விலும், மஞ்சூரியாவிலும் பரவியிருந்த கினியப் பேரரசை ஒழித்து, பீகிங் நகரைக் கைப்பற்றிக் கொண்டான். தென் சீனுவை ஆண்ட சூங் மன்னர்களுடன் அவன் நட்புரிமையோடு இருந் தான். சூங் மன்னர்கள் இதனுல் கினியருக்கு எதி ராகச் செங்கிஸ்கானுக்கு உதவியும் புரிந்தனர். நாடோடி உணர்ச்சி மிக்க செங்கிஸ்கான் நகரங்களை யும், பட்டணங்களையும் வெறுத்தான். ஒரு சமயம் அவன் சீன நகரங்கள் எல்லாவற்றையும் தரைமட்ட மாக்க எண்ணினுனும். இவ்வாறு சீனுவில் நுழைந்த மங்கோலிய இனத்தவருக்கு அந்நாடு பணிந்து விட்டாலும், அது அவர்களுக்குத் தன் நாகரிகத் தையும், கலையையும் அளித்து அவர்களைத் தன் இனமாகவே மாற்றிக் கொண்டது.

மங்கோலியரில் சீன வெற்றியை முற்றுறச் செய் தவன் **குப்ளேகான்** என்பவன் ஆவான். குப்ளே கான் கி. பி. 1252ல் **மங்குகான்** என்ற மகாகானுல் சீனுவுக்குக் கவர்னராக நியமிக்கப்பட்டவன். அவன் நெடுங்காலம் சீனுவில் வாழ்ந்தமையால் அவனுக்கு அந்நாடு மிகவும் பிடித்துவிட்டது. அவன் பீகிங்கின் பெயரை **கான்பாலிக்** அல்லது **கான் நகரம்** என்று மாற்றிவைத்துத் தன் தலைநகராக்கிக் கொண்டான்.

**சீனுவில் குப்ளேகான் :**

மங்கோலிய இனத்தில் வந்த குப்ளேகான் நாளடைவில் சீன நாகரிகத்திலும், பண்பாட்டிலும் பயின்று சீனர்களில் ஒருவனுகவே மாறிவிட்டான். அவன் யுவான் வமிசம் என்னும் தனித் தன்மை வாய்ந்த சீன வமிசம் ஒன்றையும் ஏற்படுத்தினுன். அவன் பீகிங் நகரைத் தனது தலைநகராகக்கொண்டு ஆண்டு வந்தபோது, அயல்நாட்டு யாத்ரிகர்களைப் பெரிதும் வரவேற்ருன். **நிகோலோ போலோ, மாபியோ போலோ** என்னும் பெயர் பூண்ட இரு வெனிஸ் வர்த்தகர்கள் அவன் அவைக்கு வந்தார் கள். அவர்கள் பாரசீகத்தை ஆண்ட ஹூலகு மன்ன னிடம் வந்த குப்ளேகானின் தூதுவர்களால் பார சீகத்திலிருந்து சீனுவுக்கு அழைத்துச் செல்லப்பட் டனர். குப்ளேகான் அவ்விரு சகோதரர்களையும் முகமன் கூறி வரவேற்ருன். அவர்கள் அவனுக்கு ஐரோப்பாவைப் பற்றியும், கிறிஸ்துவ மதத்தைப் பற்றியும், போப் பாண்டவரைப் பற்றியும் கூறினர். அவனுடைய சிந்தை கிறிஸ்துவ மதத்தின்பால் சென்றது. அவன் அவர்களை கி. பி. 1269 ல் ஐரோப்பாவிற்குத் திரும்பியனுப்பினுன். “ஏழ்கலை களில் வல்லவர்களும், கிறிஸ்துவ சமய சாத்திரங் களில் வல்லவர்களுமான நூறு பேரைத் தன்னிடம் அனுப்பி வைக்கவேண்டும்,” என்னும் செய்தியைப் போலோ சகோதரர்கள் வாயிலாக போப்பாண்டவ ருக்கு அனுப்பிவைத்தான். போலோ சகோதரர்கள் போப்பாண்டவரிடம் சென்ற காலை அவர் நிலை மிகவும் மோசமாக இருந்தது. நூறு சமய வல்லுநர் களும் கிடைக்கவில்லை. இரண்டாண்டுகளுக்குப் பிறகு போலோ சகோதரர்கள் இரண்டு கிறிஸ்துவத் துறவிகளைத் தங்களுடன் அழைத்துக்கொண்டு மறு படியும் சீனுவுக்குப் பயணமானுர்கள்.

இம்முறை அவர்களுடன் நிகோலோ போலோ வின் மகன் **மார்கோ போலோவும்** சீனுவுக்குப் பயணமானுன். மூன்று போலோக்களும் தங்களுடைய நீண்ட, பெரிய, இன்னல் மிகுந்த பயணத்தைத் துவக்கினுர்கள். ஆசியா முழுமையும் தரை மார்க்கமாகவே கடந்து சென்ருர்கள். இந் நீண்ட பயணத்தினூடேயே மார்க்கோ போலோ மங்கோலிய மொழியை நன்கு கற்றுத் தேர்ந்தான். பல இன்னல்களுக்குப் பின்னர் அவர்கள் பீகிங் நகரை வந்தடைந்தனர். இத்தகைய பயணத்திற்காக அவர்களிடம் சிறப்பான பிரயாண அனுமதிச் சீட்டு ஒன்றிருந்தது. அது பொன் தகட்டில் பொறிக்கப்பட்டு மகாகானுலேயே வழங்கப்பட்டிருந்தது.

சீனுவை அடைந்த சின்னுட்களிலேயே மார்க்கோ, மகாகானுன குப்ளேகானுடைய அன்புக்குரியவனுனுன். ஏழாண்டுகள் அவன் குப்ளேகானிடம் அரசியல் அலுவலனுக வேலைபார்த்து வந்தான். குப்ளேகான் அதனுல் அவனைக் கவர்னராக்கிச் சீனுவின் பல பாகங்களுக்கும் அரசாங்க அலுவல்களுக்காக அனுப்பி வைத்தான். ஆயினும் மூன்று போலோக்களும் சீனுவுக்கு வந்து நெடுங் காலம் ஆனதால், தாய் நாட்டைக் காணவேண்டு மென்ற ஆவல் மிகுந்தது. குப்ளேகான் அவர்களை எளிதில் தாய்நாட்டிற்குத் திரும்பியனுப்ப ஒப்ப வில்லை. இறுதியாகத் தாய்நாடு திரும்புவதற்கு அவர்களுக்கு ஒரு வாய்ப்புக் கிட்டியது. குப்ளே கானின் ஒன்றுவிட்ட சகோதரனுன **ஆர்கன்** என்பவன் பாரசீகத்தில் இல்கான் நாட்டை ஆண்டு வந்தான். அவனுடைய மனைவி இறந்துவிட்டதால் அவன் மறுமணம் செய்து கொள்ள விரும்பினுன். அவனுடைய முதல் மனைவி அவன் மறுமணம்

செய்து கொள்வதாயின் தன் இனத்திலேயே ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்து மணந்து கொள்ள வேண்டுமென்று அவனிடம் ஓர் உறுதி வாங்கி இருந்தமையால், அவன் குப்ளேகானிடம் தன் தூதுவர்களை அனுப்பித் தனக்கு ஏற்ற மணமகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பும்படி கேட்டிருந்தான். குப்ளே கானும் அவ்வாறே தன் சகோதரனுக்காகச் சிறந்த ஓர் அரச குமாரியைத் தேர்ந்தெடுத்து, மூன்று போலோக்களுடன், தகுந்த காவலோடும், பரிவாரத்தோடும் அனுப்பிவைத்தான். அவர்கள் தென்சீனுவிலிருந்து புறப்பட்டுக் கடல்மார்க்கமாகச் சுமத்திராவுக்குச் சென்று, அங்குச் சிலகாலம் தங்கிவிட்டு, அங்கிருந்து தமிழ் நாட்டிற்கு வந்தார்கள். தென்பாண்டி நாட்டில் அப்போது சிறந்து விளங்கிய **காயல்** துறைமுகத்தை அவர்கள் கண்டு களித்தனர். மணப்பெண்ணும், மார்க்கோவும், மற்றவர்களும் தமிழ் நாட்டில் சிறிது காலம் அதிகமாகவே தங்கிவிட்டார்கள். இரண்டாண்டுகள் கழித்து அவர்கள் பாரசீகத்தை அடைந்தார்கள். ஆனல் மணமகள் போய்ச் சேருவதற்குள் ஆர்கன் மன்னன் இறந்துவிட்டான். ஆனலும் அந்த அரசகுமாரி தன் வயதிற்கும், அழகிற்கும் ஏற்ற இறந்துபோன மன்னனின் மகனையே மணந்துகொண்டாள்.

**போலோக்களின் சீன அனுபவம் :**

அரச குமாரியைப் பாரசீகத்தில் கொண்டு சேர்த்த போலோக்கள் கான்ஸ்டாண்டிநோபிள் வழியாக கி. பி. 1295ல் தாங்கள் புறப்பட்டு இருபத்து நான்காண்டுகள் கழிந்த பின்னர் வெனிஸ் நகரை அடைந்தார்கள். அங்கு ஒருவராலும் அவர்களை அடையாளம் கண்டுகொள்ள இயலவில்லை. தங்களை அறிமுகம் செய்துகொள்ளும் பொருட்டுத் தங்கள் பழைய நண்பர்களுக்கும், பிறருக்கும் ஒரு

விருந்தளித்தார்கள். அந்த விருந்தின் இடையில் தங்கள் அழுக்கடைந்த, ஒட்டுப்போட்ட உடைகளைக் கிழிக்கவும் அவற்றிலிருந்து வைரமும், மாணிக்கமும், மரகதமும், வேறு பல விலை மதிக்க வொண்ணுத அணிகலன்களும் கலகலவெனக் கொட்டி விருந்தினரைப் பெரு வியப்பில் ஆழ்த்திற்ரும். இதனுல் சீனு அக்காலத்திலேயே எத்தகைய செல்வம் கொழிக்கும் நாடாகவும், கலைவளம் நிறைந்ததாகவும் இருந்திருக்க வேண்டும் என்பதை நாம் யூகிக்கலாம். மார்க்கோ போலோ தமது சீனப் பிரயாணம் என்ற நூலில் சிறப்பாகச் சீனுவையும், அங்குச்செய்த பிரயாணத்தையும் வருணிக்கிருர். சீனுவைப் பற்றி அவர் கூறுவதாவது: பெரிய சீனத் துறைமுகங்கள் பலவற்றில் கீழ்த் தேசக் கப்பல்கள் நிறைந்து காணப்படுகின்றன. அவைகளில் சில 300 அல்லது 400 பேர்களை ஏற்றிச்செல்லக்கூடிய அவ்வளவு பெரியவை. பல நகரங்களையும், பட்டணங்களையும் உடைய சீனு தேசம் பல்வளமும் பெற்றுப் பொலிகிறது. பட்டுப் பீதாம்பரங்களும், டபேடாவகைகளும் நெய்யப்படுகின்றன. பசுமை நிறைந்த வயல்களும், திராட்சை முதலியதோட்டங்களும் நாட்டை அணி செய்கின்றன. நெடுஞ்சாலைகள் நெடுகிலும் பிரயாணிகள் வசதியாக தங்குவற்குரிய சத்திரம், சாவடிகள் இருக்கின்றன. மாற்றுக் குதிரைகள் மூலம் தபால் அனுப்பப்பட்டு வந்தது. இது இருபத்து நான்கு மணி நேரத்தில் நானூறு மைல்வீதம் சென்றதாம். விறகுக்குப் பதில் சீனர்கள் நிலத்திலிருந்து தோண்டி எடுக்கப்பட்ட ஒரு வகைக் கறுப்புக் கற்களை உபயோகித்தார்கள். இதிலிருந்து அக்காலத்திலேயே சீனர்கள் நிலக்கரியின் பயனை அறிந்திருந்தார்கள் எனத்தெரிகிறது. குப்ளேகான் காகித நாணயங்கள் வழங்கினுனும். அதாவது தற்காலத்தைப் போல ரூபாய் நோட்டுக்கள் அச்சிடப்பட்டு அவை

களுக்கு ஈடான பொன் கேட்கும்போது கொடுக்கப் படும் என்று உறுதி செய்யப்பட்டது. இவ்வாறு மார்க்கோபோலோ இன்னும் சீனுவின் மற்றைய சிறப்புக்களையும் தமது நூலில் விவரிக்கிருர்.

குப்ளேகான் கி. பி. 1292ல் மரணமடைந் தான். அவனுக்குப் பின்னர் அவன் வமிச வழி வந்த வர்களான யுவான் வமிசத்தவர் சீனுவை ஆண்டு வந்தனர். ஆனுல் அவர்கள் ஆட்சி நெடுங்காலம் நீடிக்கவில்லை. குப்ளேகான் இறந்து எழுபத்தாறு ஆண்டுகளுக்குள்ளாக அதாவது கி. பி. 1368ல் மங்கோலியரது ஆட்சி சீனுவில் முடிவுற்றது. மங்கோலியரும் பொதுமக்கள் கிளர்ச்சியால் சீனுவை விட்டு ஓடவேண்டியவராயினர்.

அவ்வாறு மக்கள் கிளர்ச்சியைத் தலைமைதாங்கி நடத்தியவன் ஹுங்வு என்பவன். அவன் மிக எளிய குடும்பத்தில் பிறந்தவன். அவன் பள்ளியில் கற்றவனல்லன். ஆனுல் வாழ்க்கைப் பள்ளியில் கற்ற பாடம் மக்களைத் தலைமை வகித்து நடத்தும் ஆற்றலை அவனுக்குக் கொடுத்திருந்தது. மங்கோலி யரை ஹுங்வு வெற்றி கண்டதும் அவனே மன்ன னும் ஆனுன். சீனுவின் மன்னன் ஆகிய பின்னரும் கூட அவன் தன் எளிய நிலையைக் கைவிடவில்லை. இவன் வழி வந்த சீனுவை ஆண்டவர்கள் **மிங் வமிசத்தினர்** எனப்படுகின்றனர்.

**மிங் வமிசம் :**

ஹுங்வு, மிங் வமிசத்தின் முதல் சக்கரவர்த்தி யாக விளங்கினுன்; தன் மக்களுக்காக அல்லும், பகலும் உழைத்தான். அவன் எளிய குடிமக்களின் நன்மைக்காக அரும்பாடுபட்டான். இதனுல் இம் மன்னன் இன்றைக்கும் சீன மக்களால் நன்றியுடன்

போற்றப்படுகிறான். ஹூங்வுக்குப் பிறகு, அவனுடைய மகன் **யுங்லோ** என்பவன் மிக்க பெருமையுடன் அரசோச்சினான். அதன் பின்னரும் பல மன்னர்கள் சீனாவை ஆண்டனர். மிங் வமிச காலத்தில் சீனா பேரொளி வீசி விளங்கிற்று. மிங் என்ற சொல்லுக்கு ஒளி என்றே பொருள். சீனாவை ஆண்ட வமிசங்களுக்குள் எல்லாம் அதுதான் மேன்மையான சீன வமிசம். அதன் ஆட்சியில் சீன மக்களின் மேதைத்தனம் தங்குதடையின்றிப் பொங்கி வழிந்தது. உள்நாட்டு நிலைமையிலும், வெளிநாட்டு நிலைமையிலும் அமைதி ஏற்பட்டது. அயல் நாடுகளுடன் சீனா நட்புரிமை பூண்டு வாழ்ந்தது. அக்காலத்தில் ஜப்பானை ஆண்ட **ஷோகன்** தன்னை மிங் சக்கரவர்த்தியின் அடிமை என்று கூறிக்கொண்டான். மிங் ஆட்சியில் மக்கள் குறையின்றி வாழ்ந்தனர். அரசாங்கம் நல்ல முறையில் நடைபெற்றது. வரிகள் குறைக்கப்பட்டன. சாலைகளும், போக்குவரவுக்கான கால்வாய்களும், நீர்ப்பாசனவாய்க்கால்களும், நீர்த்தேக்கங்களும் அபிவிருத்தி செய்யப்பட்டன. பஞ்ச காலத்தில் உதவத் தானியக் களஞ்சியங்கள் ஏற்படுத்தப்பட்டன. மிங் மன்னர்கள் கலைகளையும் கைத்தொழில்களையும் ஆதரித்தார்கள். மாட மாளிகைகள் கட்டப்பட்டன. அற்புதமான ஓவியங்கள் கலைஞர்களால் வரையப்பட்டன. அக்காலத்தில் பீங்கான் பாண்டங்களில் விதவிதமான உருவங்களும், சித்திர வேலைப்பாடுகளும் அழகுறச் செய்யப்பட்டன. மிங் வமிச காலத்துக் கலைப்பொருட்கள் பல இன்னும் இருக்கின்றன. மரத்திலும், தந்தத்திலும், மரகதத்திலும், நீலத்திலும், பளிங்கிலும் செய்யப்பட்டுள்ள அருமையான வேலைப்பாடுகளும், வெண்கலப் பூந்தாழிகளும், பீங்கான் பாத்திர வகைகளும் மிங் காலத்தின் கலைச் சிறப்பைப் பறைசாற்றி நிற்கின்றன.

17ஆவது நூற்ருண்டின் இடையில் சீனுவின் மீது படையெடுத்த மஞ்சு இனத்தவர்களால் மிங் ஆட்சி ஒழிக்கப்பட்டது. மிங் வமிசம் அழிவதற்கு முக்கியமான காரணங்கள் சில உண்டு. அவற்றில் முக்கியமாக உள்நாட்டில் குழப்பம் மிகுந்தது. எங்கும் கொள்ளைக்காரத் தலைவர்களின் அட்டகாசம் மிகுந்தது. மஞ்சுக்களுக்கு எதிராக மிங் சேனையை நடத்திச் சென்றவன் உசான்குவி என்பவன். அவனே மிங் சக்கரவர்த்திக்கு எதிராக மஞ்சு இனத்தவருடன் சேர்ந்து கொண்டான். அதனுல் மஞ்சுக்கள் எளிதில் பீகிங் நகரைக் கைப்பற்றினர். இதனுல் உசான்குவி இன்றளவும் சீனுவில் வெறுக்கப்பட்டு வருகிருன். சீன வரலாற்றிலேயே அவன் ஒரு பெரிய துரோகியாகக் கருதப்படுகின்ருன்.

**மஞ்சுக்கள் ஆட்சியில் சீனு :**

மிங் வமிசத்தை வெற்றி கொண்ட மஞ்சுக்கள் வெகு விரைவில் சீனு முழுமையும் தங்கள் ஆட்சியின் கீழ்க்கொண்டு வந்தார்கள். மஞ்சுக்கள் சீன மக்களைத் தம் வசப்படுத்தப் பல முறைகளைக் கையாண்டார்கள். உயர் பதவி வகித்து வந்த சீன மக்களைத் தம் பக்கம் கவர்ந்து மீண்டும் அவர்களையே அப்பதவியில் அமர்த்தினர். அரசாங்க முறைகளை மாற்ருது, ஆனுல் அதை ஆட்டிவைப்பவர்களாக மட்டும் அவர்கள் இருந்தார்கள். சீனு அந்நியரது ஆட்சியில் உள்ளது என்பதை எடுத்துக்காட்ட இரண்டு விஷயங்கள் வெளிப்படையாக இருந்தன. சீனுவின் முக்கிய பகுதிகளில் மஞ்சுப் படைகள் நிறுத்தி வைக்கப்பட்டன. மஞ்சுக்கள் பின்னல் போட்ட சவுரி மயிர் அணிந்து கொள்வது வழக்கம். அடிமைத்தனத்தின் அறிகுறியாகச் சீனர்கள் அவ்வழக்கத்தை மேற்கொள்ள வேண்டுமென வற்புறுத்தப்பட்டனர். சீனர்கள் என்ருல் நமக்கு அந்தப் பின்னல் நினைவுக்கு

வரும். ஆனால் அது சீனர்கள் வழக்கமன்று. அது அவர்களுடைய அடிமைத்தனத்தின் சின்னம். ஆனால் இக்காலத்தில் சீனர்கள் பின்னல் பின்னலைத் தொங்கவிடும் வழக்கத்தைவிட்டு விட்டார்கள்.

**மஞ்சு மன்னன் காங்ஹி :**

கி. பி. 1650 ஆம் ஆண்டிலிருந்து சீன முழுவதும் மஞ்சுக்களின் ஆட்சி வேரூன்றி நின்றது. மஞ்சு வமிசத்தில் அசாதாரணமான திறமை வாய்ந்த சில அரசர்களும், அரசியல் தந்திரிகளும் தோன்றினார்கள். அந்த வமிசத்தில் இரண்டாவது சக்கரவர்த்தியாக வந்தவன் காங்ஹி என்பவன். அவன் பட்டத்திற்கு வந்தபோது அவனுக்கு வயது எட்டு தான். உலகிலேயே மிகப் பெரிய பேரரசிற்கு அறுபத்தொரு ஆண்டுகள் அதிபதியாயிருந்து அதை ஆண்டு வந்தான். ஆனால் அவன் வரலாற்றில் இடம் பெற்றிருப்பதற்கு அவனுடைய நீண்டகால ஆட்சியோ, அல்லது அவனுடைய போர்த்திறனோ காரணமல்ல. அவனுடைய அரசியல் சூழ்ச்சிகளும், சீன இலக்கியத்திற்கு அவன் செய்துள்ள தொண்டுகளுமே அவனுக்கு நிலையான புகழை அளிக்கின்றன. காங்ஹி, கன்பூஷியஸ் மதத்தைச் சேர்ந்தவன். ஆனாலும் அவன் பிற மதங்களையும் போற்றி வந்தான். அவனது குண நலன்கள் மிக விசித்திரக் கலவைகளாக இருந்தன. அவன் தத்துவ விசாரணையிலும், இலக்கிய அனுபவத்திலும், கலை முயற்சியிலும் மூழ்கியிருந்தான். அவ்வாறே யுத்த நிபுணத்துவமும், வெற்றியில் விருப்பும் உடையவனாக இருந்தான். இலக்கியங்களையும், கலைகளையும் அவன் ஆழ்ந்து கற்றான். அவற்றின் பயனாகச் சீன இலக்கியம் என்னும் மரத்தில் மூன்று அருஞ்சுவைக் கனிகள் பழுத்தன. அவை கீழே கூறப்பட்டுள்ள மூன்று நூல்களாகும். அந்நூல்கள் அவனுடைய

விருப்பத்தின்படியும், பெரும்பாலும் அவனுடைய சொந்த மேற்பார்வையின் கீழும் இயற்றப்பட்டன. அந்நூல்கள் அவனுடைய கல்வியின் ஆழத்தையும், ஆர்வத்தையும் நமக்குப் புலப்படுத்துகின்றன.

சீன மொழியில் சொற்கள் கிடையாது; சித்திர வடிவமான எழுத்துக்களே உள்ளன. காங்ஹி அம் மொழியில் ஒரு பேரகராதி இயற்றுவித்தான். அதில் 40,000 சித்திர எழுத்துக்கள் எடுத்தாளப்பட்டுள் ளன. அவையனைத்தும் பல சொற்ருெடர்களால் உரிய முறையில் விளக்கம் செய்யப்பட்டும் இருக் கின்றன. இன்றுகூட அதற்கு இணையான நூல் உலகில் வேறெங்கும் இருப்பதாகத் தெரியவில்லை. காங்ஹியின் ஆர்வத்தினுல் தோன்றிய இன்னெரு நூல் சித்திர விளக்கமுடைய பெரிய நிகண்டு ஆகும். ஆச்சரியமான அந்நூல் பலநூறு புத்தகங் களை உள்ளடக்கியது. அதை ஒரு முழு நூல் நிலையம் என்றே சொல்லிவிடலாம். ஒன்றுவிடாமல் எல்லா விஷயங்களும் அந்நூலில் கூறப்பட்டிருக்கின்றன. காங்ஹியின் மரணத்திற்குப் பின் செப்பேடுகளில் இருந்து அந்நூல் அச்சிடப்பட்டது. காங்ஹி இயற்று வித்த மூன்ருவது பெரிய நூல், சீன இலக்கியத் திரட்டு ஆகும். அதில் அகராதி வரிசையில் வார்த்தைகளும், உரைநடைப் பகுதிகளும் திரட்டப் பட்டு ஒப்பு நோக்கப் பெற்றிருக்கின்றன. இதை மிக்க அரியசெயல் என்றே பாராட்டவேண்டும். ஏனெனில் சீன இலக்கியக் கடலைக் கடைந் தெடுத்தே இந்நூலை உருவாக்கவேண்டியிருந்தது. கவிகள், வரலாற்று ஆசிரியர்கள், கட்டுரையாளர் கள் முதலியோர் எழுதியவற்றிலிருந்து எடுத்த நீண்ட மேற்கோள்கள் அந்நூலில் தரப்பட்டுள்ளன.

காங்ஹிக்குப் பின்னர் அவனது வழி வந்தவர் களும் சீனுவைச் சிறப்பாக ஆண்டனர். ஆங்கிலேய

ரும், கிறிஸ்தவப் பாதிரிமார்களும் சீனுவில் நல்ல செல்வாக்குப் பெற்றனர். அதனுல் காங்ஹி கிறிஸ்தவர்களின் செல்வாக்கைக் குறைக்கவும், தன் நாட்டை அந்நியர்கள் கைப்பற்றிக்கொள்வதினின்றும் காத்துக்கொள்ளவும் நடவடிக்கை எடுத்தான். அவன் நாளிலிருந்து அயல் நாட்டவர்கள் தம் நாட்டிற்கு வராமல் சீனர்கள் பாதுகாப்புச் செய்தனர். ஆனுல் 1557ல் கான்டன் நதிக்கு அண்மையில் போர்த்துகீசியர்களுக்குச் சரக்குக்கிடங்கு ஒன்று கட்டிக்கொள்ள அனுமதி அளிக்கப்பட்டது. பின்னர் ஒரு நூற்றுண்டுக்குப் பின்னர்ப் போர்த்துகீசியரைப் பின்பற்றி ஆங்கிலேயர் சீனுவில் நுழைந்தனர். 1842ஆம் ஆண்டிற்குள் தங்கள் முக்கிய இடமாக ஹாங்காங் நகரைத் தங்கள் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வந்தனர். ஹாங்காங் அயல்நாட்டு வாணிகத்தின் தலேயாய இடமாக அமைந்தது.

அயல் நாட்டவரின் வாணிகத்தால் சீனு ஏனைய உலக நாடுகளுடன் தொடர்புகொள்ள ஆரம்பித்தது. பத்தொன்பதாம் நூற்றுண்டிலும், இருபதாம் நூற்றுண்டிலும் சீனுவில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் நிகழ்ந்தன. 1911ஆம் ஆண்டில் மஞ்சு வம்சம் அழிந்தது. மக்கள் குடியரசு, சீனுவில் மலர்ந்தது. சீனுவின் புரட்சித் தலேவராயிருந்த **சன்-யாட்-சென்** சீனுவின் நலனேக் கருதி **யுவான்-ஷி-காய்** என்பவரைக் குடியரசுத் தலேவராக்கினுர்.

யுவான் மக்கள் கொள்கைக்கு ஒத்துப் போகாததால், சன்-யாட்-சென்னுல் ஏற்படுத்தப்பட்ட **கோமிங்டான்** அல்லது **தேசிய கட்சி**, புரட்சியில் இறங்கியது. யுவான் இப் புரட்சியை ஒடுக்கினுலும் சீனுவை மற்ருெரு பேராபத்தில் சிக்கவைத்தார். 1915ஆம் ஆண்டில் ஜப்பான் சீனுவின்மீது தனது இருபத்தொரு உரிமைகளேக் கோரியது. அது சமயம்

பிரிட்டனிலும், அமெரிக்காவிலும் நடந்த நிகழ்ச்சி களால் அவை ஓரளவு மாறுபட்டது. யுவான் இறந்ததும், **லீ-யுவான்-ஹங்** என்பவர் குடியரசுத் தலைவரானுர். அதே சமயத்தில் சீனு முதல் உலக யுத்தத்தில் ஈடுபட்டது. இவ்வமயத்தில் சீனுவின் உள்நாட்டு நிலையில் குழப்பமேற்பட்டது. கோமிங் டான் கட்சி சீனுவின் தென்பகுதியில் தனியாட்சியை ஏற்படுத்தியது. அதன் தலைநகரம் **கான்டன்**. இதனுல் வடசீனு அரசாங்கம் பலம் குன்றியது. பல மாகாண கவர்னர்கள் தங்கள் சொந்தப் படையை வைத்துத் தனியாட்சியில் ஈடுபட்டனர். இவை வட, தென் ஆட்சிகளுக்கு எதிராகக் கிளம்பின. இவ் வுள் நாட்டுக் குழப்பம் இலட்சக்கணக்கானவர்களை வீடிழக்கச் செய்தது. சன்யாட்சென் 1925 ஆம் ஆண்டில் இறந்தார். அவருக்கு அடுத்துச் **சியாங்-கே-ஷேக்** கோமிங்டான் படையின் தலைவரானுர். அவர் சீனு முழுமையையும் ஒன்றுபடுத்திக் குடியர சாக்க முயன்ருர். அவர் தென் சீனுவில் செல் வாக்குப் பெற்று வந்த கம்யூனிஸ்டுகளின் செல் வாக்கைக் குறைக்க நடவடிக்கைகள் எடுத்தார். 1928 ஆம் ஆண்டில் நாடு ஒன்றுபடுத்தப்பட்டது. நான்கிங் தலைநகரமாயிற்று. சியாங் கம்யூனிஸ்டு களுடன் தொடர்ந்து போரிட வேண்டியிருந்தது. அப்போது 1931 ஆம் ஆண்டில் ஜப்பான் மஞ்சூரி யாவை ஆக்கிரமிக்க ஆரம்பித்தது. சிறிது சிறிதாகத் தன் ஆக்கிரமிப்பைச் சீனுவில் அதிகரித்தது. இறுதி யாக ஜப்பானியர்கள் சீனுவை ஒழித்துக்கட்ட எண்ணி 1937 ஆம் ஆண்டில் சீனுவைத் தாக்கி னர். சீனு பெரும்பாலான நகரங்களை இழந்தது. அதன் தலைநகர் ஜப்பானியர்களால் கைப்பற்றப் பட்டது. சீனு தனது தலைநகரைச் சன்சிங்கிற்கு மாற்றியது; தொடர்ந்து ஜப்பானை விரட்ட முயற்சி செய்தது. மேற்குச் சீனு போதுமான படைகளை

அதற்கு வழங்கியது. 1941ஆம் ஆண்டில் சீனு தனக்கு உதவியாக ஜப்பானைச் சமாளிக்கப் பிரிட்டனையும், அமெரிக்காவையும் தன்னுடன் சேர்த்துக் கொண்டது. அதன் பின்னர் இரண்டாம் உலக மகாயுத்தத்தில் ஜப்பான் சரணடைந்த பின்னர்ச் சீனு தன் ஆதிக்கத்தைக் கைவிட்டது.

சீனு இருபதாம் நூற்ருண்டில் மேலை நாடுகளுடன் சேர்ந்து துரிதமாக முன்னேறியது. ஆயினும் இன்றும் சீன மக்கள் தங்கள் பழம் நாகரிகத்தையும் கலைச் சிறப்பையும் கைவிடாது பின்பற்றி வருகின்றனர். சீனுவில் மூன்று முக்கிய மதங்கள் உள்ளன. இவை கன்பூசியஸ் மதம், தாவோய் மதம் (Taoism), புத்தமதம் ஆகும். கன்பூசியஸ் மதத்தைத் தோற்றுவித்த பெரியார் கி.மு. 551ல் சீனுவில் வாழ்ந்தார். தற்காலத்தில் ஒவ்வொரு நகரிலும் ஒரு கன்பூசியஸ் கோவிலாவது உள்ளது. கன்பூசியஸின் கொள்கைகள் நாடெங்கும் போற்றப்பட்டு வருகின்றன.

லௌ-ட்சே என்பவர் தாவோய் மதத்தை உருவாக்கினுர். அவரும் ஏறத்தாழ, கன்பூசியஸ் மகான் வாழ்ந்த காலத்திலேயே வாழ்ந்திருந்தார். இம்மதம் உருவ வழிபாட்டை அனுமதித்தது. எனவே நகர் காவல் தெய்வங்களும், வீட்டுத் தெய்வங்களும், மலைத் தேவதைகளும் வணங்கப்பட்டன. மதசம்பந்தமாக எழுப்பப்பட்ட நினைவுச் சின்னங்கள் ‘‘பகோடாக்கள்’’ என்று அழைக்கப்பட்டன. அவை இரண்டாயிரத்திற்கு மேல் சீனுவில் இருந்தன. அவை நாட்டிற்கு நலனை அளிப்பனவாகச் சீனரால் கருதப்பட்டன. அவை பெரும்பாலும் செங்கற்களாலேயே கட்டப்பட்டன. அவற்றில் நான்கிங்கிலுள்ள பகோடா மிகவும் சிறந்ததாக எண்ணப்பட்டது. அதன் உச்சியில் உருண்டை வடிவில்

அமைக்கப்பட்ட ஒரு பந்து இருக்கிறது. அதில் சங்கிலியால் இணைக்கப்பட்ட ஐந்து பெரிய முத்துக்கள் உள்ளன. அவை சீனுவைப் பேராபத்திலிருந்து காப்பதாக மக்கள் நம்புகிருர்கள். இந்தப் பகோடா முதலில் மிங் மன்னனுடைய மகனுல் அவன் மனைவியைப் பெருமைப்படுத்துவதற்காகக் கட்டப்பட்டது. அது பின்னர் 1953ஆம் ஆண்டில் ஒரு புரட்சியில் சேதமாக்கப்பட்டது.

இவ்விரண்டு மதங்களுக்கும் அடுத்ததாக இருப்பது புத்தமதம். பௌத்த கோவில்களும், மடங்களும், மலைகளும் சீனுவில் நிறைய உள்ளன. சீனுவின் வடபகுதியிலுள்ள ஊ-தாய் மலைகளில் உள்ள கோவில்களுக்குச் சீனுவிலிருந்தும், திபேத்திலிருந்தும் மக்கள் யாத்திரை செல்கிருர்கள். பௌத்த குருக்கள் எல்லாவித மதச் சடங்குகளையும் நடத்தி வைக்கின்றனர்.

சீனுவின் ஆதி மதம் பெரும்பாலும் "முன்னோர் வழிபாடு" என்றே சொல்லவேண்டும். ஒவ்வோரு இல்லத்திலும் இறந்துபோன தமது முன்னோர்களைப் பற்றிய எல்லாக் குறிப்புகளும் செதுக்கிய மரப்பலகைகளாவது, கற்களாவது தனியான ஓரிடத்தில் வரிசையாக நடப்பட்டிருக்கும். இதற்கு முன்னோர்களின் குறிப்புப் பலகை என்பது பெயர். இவை அந்தந்தக் குடும்பத்திலுள்ள மூத்த மகனுலேயே நடப்படும். அம் மூத்த மகன் நறுமண தூபமிட்டுத் தன் முன்னோர்களை வணங்கி வழிபாடு செய்து தங்களுக்கு நல்வாழ்வளிக்கும்படி வேண்டுவான். இறந்து போனவரின் உடல்கள் சவப்பெட்டிகளில் வைக்கப்பட்டு, அந்தந்தக் குடும்பத்திற்கென்று உள்ள புதைக்குமிடங்களில் புதைக்கப்படும். அவ்வாறு இறந்து போனவரைப் புதைக்கப் போகும்போது மூத்தவன் முன் செல்ல அக்குடும்பத்தினரும், உறவினரும் அக்கம்பக்கத்திலிருப்பவர்களும் உடன்

செல்வர். இறந்தவரைப் புதைக்கச் செல்லும்போது அவருக்காக உணவு, காகிதம், பணம், மற்றும் அவர் வாழ்க்கையில் பயன்படுத்திய பொருட்கள் ஆகியவற்றைக் கொண்டு சென்று சவக் குழியில் வைத்து விடுவர். அப்பொருட்கள் அவருக்கு மறு உலகத்தில் பயன்படுமென அவர்கள் நம்பினர். சீனர்கள் இறந்த ஒவ்வொருவருக்கும் மூன்று உள்ளங்கள் உண்டென்றும், அவற்றைத் திருப்தி செய்யாவிடின் இறந்துபோனர்களின் வமிசத்தாரை அவர்கள் துன்பப் படுத்துவரெனவும் நம்பி அதற்கான சடங்குகளையும் செய்வர். இறந்துபோனவருக்காகத் துக்கம் மூன்று நாட்கள் கைக்கொள்ளப்படுகிறது.

இவ்வாறு முன்னேர்கள் வழிபாடு அவர்கள் மக்களாலேயே செய்யப்படுவதால், ஆண் குழந்தைகள் இல்லாதவர்கள் தமக்கு வழிபாடு செய்ய ஆண் குழந்தைகளை முறை மகனுகக்கொள்வர். செல்வந்தர்களின் குடும்பங்களில் முன்னேர் வழிபாட்டிற்கெனத் தனியான முற்றங்கள் அமைக்கப்பட்டிருக்கும். அங்குக் குளிர்காலங்களில் அவர்களுக்கென விருந்து ஏற்பாடு செய்யப்படும். அவற்றில் திராட்சைச் சாறு, பழங்கள் முதலியவை படைக்கப்பட்டுச் சடங்குகள் செய்யப்பட்ட பின்னர் அவற்றை அவர்கள் உட்கொள்வர்.

ஆண் குழந்தைகள் பிறந்தால் சீனப் பெற்றேர் அளவிலா மகிழ்ச்சியுறுவர். வீட்டு வாயிலில் இஞ்சியைக் கட்டித் தொங்கவிடுவர். அதனுல் குழந்தைகளுக்குத் தீமை பயக்கும் பேய், பிசாசுகள் அண்டா எனவும், அயலவர்களால் துரதிருஷ்டம் வராது எனவும் நம்பினர். குழந்தைக்கு ஒரு மாதமானவுடன் தலையை மொட்டை அடித்து விடுவார்கள். அது அக்குழந்தைக்கு ஒரு முக்கியமான நாளாகும். அன்றுதான் அக்குழந்தைக்குப் பெயர் சூட்டப்படும்.

அழகான ஆடை, அணிகளை அணிவித்து அதன் பெற்ருேர்கள் கோவிலுக்கு எடுத்துச் செல்வர். அங்கே அவர்கள் தங்களுக்கு ஒரு மகனை அளித்த தற்காகக் கடவுளுக்கு நன்றி செலுத்துவர். அதன் பின்னர் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் ஒரு பெரிய விருந்தளிப்பர். சீனுவில் ஆண்களும், பெண் களும் ஒன்ருக அமர்ந்து உணவு உண்ணும் பழக்க மில்லையாதலால், இத்தகைய பெரிய விருந்துகளிலும் அவர்கள் தனித்தனியே உண்பர். ஒவ்வொரு விருந்தினரும் குழந்தைக்குத் தவருது ஏதாவது பரிசளிப்பர்.

குழந்தைகள் வளர்ந்த உடன் தங்கள் பெற்ருே ரைப்போலவே சிறிய கோட்டும், கால் சட்டையும் அணிவர். குழந்தைகளின் பிறந்த நாள் கொண் டாடப்படுவதில்லை. ஆனுல் குழந்தை பிறந்த ஆண்டை ஓராண்டு எனக் கணக்கிட்டு, அடுத்த புதுவருட நாளை ஓராண்டாகக் கொண்டு புது வருட நாளைச் சிறப்பாகக் கொண்டாடுவர். புத்தாண்டு நாளன்று ஒவ்வொருவரும் புதிய வண்ண ஆடை களை உடுத்து மகிழ்வர். வீடுகள் சிறப்புற அலங் கரிக்கப்படும். இரவில் வெடிகளையும் வாணங்களை யும் மத்தாப்புகளையும் கொளுத்திப் புத்தாண்டு தினத்தை மகிழ்வுடன் கொண்டாடுவர். புத்தாண்டு நாளன்று பொது விடுமுறை அளிக்கப்படுகிறது. புத்தாண்டின் முதல் முழு நிலவு நாள் "விளக்கு களின் விருந்து நாள்" என்றழைக்கப்படுகிறது. பல்வேறு உருக்களில் அமைந்த வண்ண விளக்கு கள் அன்று வீடுகளின் முன் தொங்கவிடப்படும். கோடையில் சீனர்கள் படகு விழாவை நடத்து கின்றனர்.

சீனச் சிறுவன் தகுந்த வயது அடைந்த உடன் கல்வி கற்கத் துவங்குகிருன். செல்வந்தர்களின் சிறு

வர்களுக்கு ஆசிரியர்களைக் கொண்டு இல்லத்தி லேயே கல்வி புகட்டப்படுகிறது; அல்லது உயர்தர நிலையிலுள்ளவர்களுக்கென அமைந்துள்ள தனி யான கல்விச் சாலைகளுக்குச் சென்று அவர்கள் கற் கின்றனர். அங்கே அவர்கள் கடினமாக உழைத்துக் கற்கவேண்டியுளது. பொதுவாக ஒவ்வொரு சீனச் சிறுவனும் தன் நாட்டிற்காகச் சிறந்த வகையில் பணியாற்ற வேண்டுமென எண்ணுகிருன். ஏழை களின் சிறுவர்கள் சிறிதளவு கல்வியே பெறுகின்ற னர்; விரைவில் அவன் ஒரு தொழிலாளியாக ஆலை களிலோ, தொழிற்சாலைகளிலோ அல்லது விவசாயி ஆக வயலிலோ வேலை செய்ய வேண்டியிருக்கிறது. சிற்சில சமயங்களில் மிகக் கீழான வேலை செய்யும் கூலிகளாகவும் அவர்கள் அமைகின்றனர்.

பெண்களின் நிலையோ இன்னும் மோசமானது. ஏழைக் குடும்பங்களில் பெண் குழந்தைகள் பிறந் தால் வறுமையின் காரணமாகப் பிறந்த உடனே அதைக் கொன்றுவிடுவார்கள்; அல்லது அடிமை யாக வேறு எவருக்கேனும் விற்றுவிடுவார்கள். பெண் குழந்தைகளுக்கு ஐந்து அல்லது ஆறு வய தான உடன் அவர்களுடைய பாதங்களை இறுகத் துணியால்சுற்றி வளரவிடாமல் தடுத்துவிடுவார்கள். இல்லையென்ருல் அவள் நாகரிகமில்லாத அடிமை என்று பிறரால் கருதப்படுவாள். பெண்களுக்குப் பெரிய பாதங்கள் இருப்பது அழகில்லை எனச் சீனர் நினைத்தனர். இக்கொடிய வழக்கம் எப்படி வந்தது எனத் தெரியவில்லையாயினும், முன்காலத்தில் ஊன மடைந்த ஓர் அரசியினிடமிருந்து துவங்கியிருக்க வேண்டுமென மட்டும் கருதப்படுகிறது. சீனுவில் இவ் வழக்கம் இன்னும் போகவில்லை. பொதுவாகச் சீனப் பெண்கள் மிகவும் கடுமையாக உழைக்க வேண்டும். சின்ஞட்களில் அவள் பெற்ருேர்கள்

ஓர் இளைஞனுடைய பெற்றோர்களுக்கு அவளை விற்று விடுவார்கள். அப்போது அவள் புதிய ஆடைகளை யும், பல பொருட்களையும் பரிசாகப் பெறுவாள். பின்னர் அவ்விளைஞன் மணமகளுக்குப்புத்தாடைகளை உடுத்தி, ஒரு நாற்காலியுடனும், புதிய அணி மணி களுடனும் அவள் வீட்டிற்கு வருவான். அவள் அழகாக ஆடையுடுத்து, தன் முகத்தைச் சிவந்த பட்டுச் சீலையால் மூடி அந்த நாற்காலியில் அமர் வாள். பின்னர் அவளை நன்கு மூடுவர். அவள் ஊர் வலமாகத் தன் புதியவீட்டிற்கு, அதாவது, கணவன் வீட்டிற்குக் கொண்டு செல்லப்படுவாள். அங்கே திருமணச் சடங்குகள் மிக விமரிசையாகக் கொண் டாடப்படும்.

மணமகன், மணமகளைக் கைப்பற்றிக்கொண்டு, தன் இல்லத்துள் அழைத்துச் செல்வான். அங்குத் திரைச்சீலை அகற்றப்படும். மூன்று நாட்கள் பல சடங்குகளுடன் திருமணம் இனிது நடக்கும். பின்னர் அவள் தன் கணவனுக்கும், கணவனின் பெற்றோர்களுக்கும் அடங்கிப் பணிவிடை செய்து வாழவேண்டும்.

ஆனால் தற்காலத்தில் பெண்கள் நிலை மிகவும் முன்னேறியுள்ளது. பழங்காலத்தைப் போலவே அவர்கள் உடுத்தியபோதிலும் அவர்கள் வாழ்க்கை முறை பெரிதும் மாறியுளது. தற்காலத்தில் பெண்கள் வெளியுலக வாழ்வில் ஆசிரியைகளாகவும், மருத்து வர்களாகவும், மருத்துவர்களின் பணிப் பெண்களா கவும், நடிகைகளாகவும் பணியாற்றுகின்றனர். மற்றும் தற்காலத்தில் மேலை நாட்டினரைப்போன்று உடுத்தும், தலைமயிரை வெட்டியும் விட்டுக் கொள் கின்றனர்.

சீனுவின் கல்வி அமைப்பில் கிறிஸ்தவப் போத கர்கள் பெரும் மாறுதலைச் செய்துள்ளனர். மேலை

நாட்டுமுறையில் கல்வியளிக்கும் ஆரம்பப்பள்ளிகளி லிருந்து, கல்லூரிவரை தற்காலத்தில் கல்வி நிலையங் கள் சீனுவெங்கும் உள்ளன. கைத்தொழிலும், விளை யாட்டும் ஆண் பெண் இருபாலருக்கும் கல்விச்சாலை களிலேயே கற்பிக்கப்படுகின்றன. பழங்காலத்தில் கற்பிக்கப்பட்ட கல்விமுறை பெரும்பாலும் மாறி விட்டதென்றேகூறலாம். சீன மொழியும் அனைவரும் எளிதில் கற்கும் வண்ணம் திருத்தப்பட்டு விட்ட தால், கல்விகற்பது இக்காலத்தில் எளிதாகிவிட்டது. அதனுல் இன்று சீனுவின் பெரும்பாலான மக்கள் கல்வியறிவு உடையவர்களாக இருக்கிருர்கள்.

சீனுவின் நான்கு வடக்கு மாகாணங்களில் ஏராளமான சுரங்கப் பொருள்கள் அகப்படுகின்றன. **சான்ஸி மாகாணத்தில்** கிடைக்கும் நிலக்கரி மட்டும் இவ் உலகத்திற்கே ஆயிரம் ஆண்டுக் காலத்திற்குப் போதுமானதாகும் என்றுகணக்கிடப்பட்டிருக்கிறது. சீனுவின் யாங்ட்ஸிகியாங்கின் வடபகுதியில் மஞ்சள் கலந்த காவி நிறமான நிலப்பகுதியில் ஏராளமான தானியம் பயிராகிறது. ஆனுல் பஞ்ச காலத்தில் அப் பஞ்சப்பகுதியை உணவு அடைவதற்கு முன், ஏராள மானவர்கள் மடிகிருர்கள்; ஏனெனில் அங்குப்போது மான அளவுக்குப் போக்குவரவு வசதிகள் இல்லை.

இந்நிலப்பகுதியின் நிறமே சீனுவின் தேசீய நிறமாகக் கருதப்படுகிறது. அதனுல் சீனுவின் பேரர சர்களும் “மஞ்சள் நிலத்தின் ஆட்சியாளர்கள்” என்னும் பட்டப் பெயரை உடையவர்களாக இருந் தனர் ; அவர்களின் கொடியிலும் மஞ்சள் நிறத்தின் மீது இராட்சத மிருகம் இருப்பதுபோன்ற உருவம் அமைக்கப்பட்டது.

சீனுவின் வடக்கிலுள்ள ஹொயாங் ஹோ என் றழைக்கப்படும் **மஞ்சள் நதி**தான் சீனுவிலுள்ள நதி

களிலெல்லாம் பெரியது. இந்நதி தன் போக்கை ஐந்து முறை மாற்றிக்கொண்டு பல இலட்சக்கணக்கான வீடுகளேயும், பல்லாயிரக்கணக்கானவர்களின் உயிரையும் கொள்ளே கொண்டிருக்கிறது. இதனுல் இதற்குச் 'சீனுவின் துக்கம்' என்ற பெயரும் வழங்குகிறது. **யாங்ட்ஸி-கியாங்** என்பது மத்திய சீனுவில் மேற்கிலிருந்து கிழக்காகப் பாயும் ஒரு பெரிய நதியாகும். இது மஞ்சள் நதியைவிட மிக்க பயனுடையதாகும். இதில் ஆயிரம் மைல்கள்வரை சிறிய கப்பல்கள், பெரிய படகுகள் இவற்றின் போக்குவரவு சுலபமாக நடைபெறுகிறது. இவ்விரண்டு நதிகளேயும் இணைக்கும் தொள்ளாயிரம் மைல் நீளமுள்ள ஒரு பெரிய கால்வாய் சீனுவின் நீர்ப்பாசன வசதிக்கு மிகவும் பயன்படுகிறது.

கியாங்ஷு, ஷேக்கியாங் என்னும் இரண்டு மாகானங்களில் மட்டும் சீனுவில் உற்பத்தி செய்யப்படும் பட்டில் பெரும்பகுதி உற்பத்தி செய்யப்படுகிறது. பல்லாயிரக் கணக்கான பட்டுத் தறிகள் இங்கு ஆண்டு முழுவதும் வேலே செய்கின்றன. முதன் முதலில் பட்டு உற்பத்தி சீனுவில் தொடங்கி ஏனேய நாடுகளுக்குப் பரவியுள்ளது. இவ்வகையில் மற்ற நாடுகள் சீனுவுக்குக் கடமைப்பட்டுள்ளன என்றே கூறவேண்டும். ஆதி நாளில் பட்டுப் புழுவையோ, அன்றி முசுக்கொட்டை மரத்தையோ சீனுவிலிருந்து கொண்டுசெல்ல முயன்றவர்களுக்கு மரணதண்டனே விதிக்கப்பட்டது. சீனர்கள் இத்தொழில் தங்கள் நாட்டைத் தவிர வேறு எவருக்கும் தெரியக்கூடாது என முற்காலத்தில் எண்ணினர். ஆனுல் கி. மு. 550ல் இரண்டு ஐரோப்பிய யாத்திரிகர்கள் சீனுவிலிருந்து பட்டுப் புழுக்களின் முட்டைகளேத் தங்களது கைத்தடிகளில் மறைத்துக்கொண்டு ஐரோப்பாவிற்குக்

கொண்டுவந்தனர். அதிலிருந்துதான் உலகம் பட்டு நூலைப் பற்றி அறிந்தது.

சீனாவின் தென்பகுதியிலுள்ள சில மாகாணங்களிலும், யாங்ட்ஸி கியாங் பள்ளத்தாக்குகளிலும் பட்டுப்புழுவை வளர்த்து, பட்டு நூல் எடுப்பது குடிசைத் தொழிலாக நடைபெற்று வருகிறது. அங்குள்ள பெரும்பாலான குடும்பங்கள் தங்களுக்குத் தேவையான பருத்தித் துணியைத் தங்கள் வீடுகளிலேயே நெய்துகொண்டார்கள். விவசாயம் முக்கியத் தொழிலாயுள்ள மாவட்டங்களிலுள்ள மக்கள் தங்கள் சிறிய நிலங்களிலேயே தங்கள் குடும்பத்திற்குத் தேவையான தானியங்களையும் விளைவித்துக்கொண்டனர். அவ்வாறிருந்தும் பல நூல் ஆலைகளும், பட்டு நூல் ஆலைகளும், மாவு மில்களும் அங்கே நிர்மாணிக்கப்பட்டன. சில இடங்களில் இரும்பாலைகளும், கண்ணாடித்தொழில் ஆலைகளும் சிறப்பாக நடைபெறுகின்றன.

பட்டுநூலைப் போலவே தேயிலையும் சீனாவிலிருந்துதான் உலக நாடுகளுக்குப் பரவியது. பட்டுத் தொழிலுடன், **தேயிலை** பயிரிடுதலையும் சீனர்கள் செய்து வருகின்றனர். கி. பி. 1645ல் தான் தேநீரைப்பற்றி இங்கிலாந்து மக்கள் அறிந்தனர். சீனாவில் தேயிலை பயிரிடுவது குடும்பத்தொழிலாகவே நடைபெறுகிறது. சிறிய பாத்திகளில் அங்குத் தேயிலை பயிராக்கப்படுகிறது. பெண்களும், குழந்தைகளும் தேயிலையைப் பறிப்பர்.

சீனாவில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே பீங்கான் உற்பத்திப் பொருள்கள் கலைத்திறனோடு செய்யப்பட்டன என்பதை முன்பே கூறியுள்ளோம். தற்காலத்தில் அநேக பீங்கான் தொழிற்சாலைகள் நிறுவப்பட்டுள்ளன.

சீனுவின் தென் பகுதிகளில் சிறிய வயல்களில் நெல் பயிரிடப்படுகிறது. அவற்றிற்கு அண்மையிலுள்ள நதிகளிலிருந்து செயற்கை முறைகளில் நீர் பாய்ச்சப்படுகிறது. பயிர் சுமார் ஓர் அடி உயரம் வளர்ந்தபின்னர், அவற்றை நான்கு அல்லது ஐந்து பயிர்கள் கொண்ட நாற்றுக்களாக நடுவார்கள். இவை அங்கு முப்போகம் விளைந்தன. சீனுவில் கரும்பும், பருத்தியும் ஏராளமாக விளைகின்றன. பழத் தோட்டங்களும் நிறைய இருக்கின்றன. அராபியர்களால் ஐரோப்பாவிற்குக் கொண்டுவரப்பட்ட **ஆரஞ்சும்**, சீனுவிலிருந்துதான் முதன் முதலாகக் கொண்டு வரப்பட்டதாம். **வாழை**, ஆண்டு முழுவதும் சீனுவில் பயிராகிறது. சீனுவில் முக்கிய உபயோகமுள்ள தாவரம் **மூங்கில்**தான். அது ஏழை மக்களுக்கு வீடு கட்டிக்கொள்ள அங்கே ஏராளமாகப் பயன்படுகிறது. தவிர, சீனர்கள் மூங்கிலால் பல்வேறு கலைத் திறன் மிகுந்த பொருட்களையும் செய்கிருர்கள்.

உலகத்திலேயே மிகுதியான ஜனத்தொகை உடைய நாடு சீனுவாகையால் அங்கே அம் மக்களுக்குத் தேவையான தானியம் ஏராளமாக விளைவதுடன் அவர்கள் இறைச்சியும் உண்ணுகின்றனர். சீனுவில் வாழும் ஏழை மக்கள் தங்கள் உணவிற்காகப் பஞ்சகாலங்களில் பூனை, நாய், எலி முதலியவற்றையும் தங்கள் உணவாகக் கொள்ளுகின்றனர்.

சீனுவின் வடக்கே **மஞ்சூரியா** உள்ளது. இதன் மீது சீனு தன் ஆதிக்கத்தைச் செலுத்தி வருகிறது. மஞ்சூரியாவில் வாழும் மக்கள் பெரும்பாலோர் சீனுவிலிருந்து குடியேறியவர்களே. மஞ்சூரியர்கள் வேட்டையாடி வாழும் இனத்தவர். மஞ்சூரியா சீனுவுடன் இணைந்த பிறகு அவர்கள் சீனர்களிடமிருந்து விவசாயத்தைக் கற்றனர். நாளடைவில் மஞ்சூரியர்களும் தங்கள் நாடோடி வாழ்க்கையை

விட்டு மண் குடிசைகள் கட்டி வாழ ஆரம்பித்தனர். சீனர்களிடமிருந்து இவர்களும் நாகரிகத்தைக் கற்றுச் சீனர்களைப் போல வாழலாயினர். சீனப்பெண்களைப் போல மஞ்சுப் பெண்கள் கால்களை இறுகக் கட்டிச் சிறிதாக்கிக் கொள்வதில்லை. ஆனால் விரல் நகங்களில் ஒன்று அல்லது இரண்டை இரண்டங்குல நீளம் வரை வளர்த்துத் தங்கத்தாலும் வெள்ளியாலும் ஆன அணிகளைப் பூட்டி அழகு செய்து கொள்கின்றனர். மஞ்சுக்கள் சீனர்களைவிட உயரமானவர்கள்.

மஞ்சூரியாவிலும் மிக்க வளப்பமான நிலக்கரிச் சுரங்கங்கள் உள்ளன. இரும்புக் கனிகளும் உள்ளன. இங்குப் பெட்ரோலியமும் நிலத்திலிருந்து எடுக்கப்படுகிறது. தற்காலத்தில் மஞ்சுக்கள் மிகவும் முன்னேறி நவீன இயந்திரங்களைக்கொண்டு தொழில் செய்யக் கற்று வருகின்றனர். ஜப்பானியர்கள் தங்கள் நாட்டிற்குத் தேவையான நிலக்கரி, பெட்ரோலியம் முதலியவற்றை மஞ்சூரியாவிலிருந்தே பெற்றுவருகின்றனர்.

**சின்-கியாங் மாகாணம் :**

சீனுவின் மேற்குக்கோடி மாகாணம் சின்-கியாங் என்பது. இது சீனக் குடியரசின் ஒரு பகுதி. இம் மாகாணம் சீனுவில் மிகவும் முக்கியமானதொன்றுகும். இந்நாளிலும் இம் மாகாணத்தைப் பற்றிச் சிறிதளவே மக்கள் அறிந்திருக்கின்றனர். எந்த இரயில் பாதையும் இப்பகுதியை வெளி உலகத்துடன் இணைப்பதில்லை. இம்மாகாணத்தை அடையக் குதிரைகள் மீதாவது, ஒட்டகங்களின் மீதாவது சவாரி செய்துதான் அடைய முடியும். இவ்வாறு பிரயாணம் செய்யப் பல மாதங்கள் பிடிக்கும். உலகத்துடன் உறவின்றித் தனித்து வாழும் பகுதியாக இது உள்ளதால், இங்குள்ள மக்களுக்கு உலகத்

தைப் பற்றியும், தற்கால நாகரிகத்தைப் பற்றியும் அதிகமாகத் தெரியாது.

சின்-கியாங் பகுதி பெரும்பாலும் பாலேவனப் பிரதேசம். சிற்சில இடங்களில் உள்ள நீர்வளத்தால் சிறிதளவு பயிர்த்தொழில் இங்கு நடைபெறுகிறது. **திவாபு** என்னும் நகரம் இதன் தலைநகரம். ஆனல் இங்கு வாணிகமும், கைத்தொழிலும் சிறப்பாக நடைபெறும் நகரங்கள் **காஷ்கார், யார்க்கண்டு, கோட்டான்** ஆகியவை ஆகும். கிழக்குப் பகுதி நீங்கலாக இப்பகுதியின் மூன்று பக்கங்களிலும் உயர்ந்த மலைகள் உள்ளன. அவை பதினைந்தாயிரம் அடிவரை சில இடங்களில் உள்ளன. பனிமூடிய இச்சிரகரங்களேக் கடந்து பிரயாணம் செய்வது அவ்வளவு எளிதானதன்று ; மிகவும் ஆபத்தானதாகும். அம்மலையடிவாரங்களிலுள்ள புற்றரைகளில் அங்கு வாழும் மக்கள் தங்கள் ஆடு, மாடுகளை மேய்க்கின்றனர். இம்மலைகளின் வடக்குச் சரிவுகளில் நல்ல மழை பெய்கிறது. இம்மலையடிவாரத்தில் உள்ள சமவெளிகள் பயிர்த்தொழிலுக்கு ஏற்றவை அல்ல. இங்குள்ள பாலைவனச் சோலைகளை அடுத்து நகரங்கள் உள்ளன. இங்குள்ள மக்களில் பத்துச் சதவீதத்தினர் தாம் இந்நகரில் வாழ்கின்றனர். மற்றையோர் அலைந்து திரிந்து வாழும் இயல்பினர். இங்கு வாழும் மக்களிற் பெரும்பாலோர் முஸ்லிம்கள்.

இருபது நூற்றுண்டுகள் வரலாற்றில் சின்-கியாங் மாகாணம் முதலில் சீனர்களால் ஆளப்பட்டு வந்தது. பின்னர்த் துருக்கியர்களும், பிறகு மங்கோலியர்களும் ஆண்டனர். இறுதியாக மீண்டும் சீனர்களாலேயே ஆளப்படுகிறது. செங்கிஸ் கான் இதைப் பதின்மூன்ரும் நூற்ருண்டில் வெற்றி கொண்டான். பதினன்காம் நூற்ருண்டில் தைமூர் இதை வெற்றிகொண்டான். 1758ஆம் ஆண்டில்

சீனர்கள் இதைக் கைப்பற்றினர். 1862ல் முஸ்லிம் கள் புரட்சிசெய்த சமயம் இப்பகுதியின் ஆதிக்குடி கள் ஆயிரக்கணக்கான சீனர்களைக் கொன்றனர். இதனால் 1876ஆம் ஆண்டு வரை இவர்கள் சுதந்தரமாக இருந்தனர். இங்கு வாழும் மக்கள் எதைப் பற்றியும் கவலைப்படாது எப்போதும் மன மகிழ்வுடன் வாழும் பண்பினர். அவர்கள் கல்வி யறிவிலோ, வாழ்க்கை முறையிலோ முன்னேற வேண்டும் என்பதில் விருப்பமில்லாதவர்கள். இவர் களில் ஆண்களும், பெண்களும் குதிரைச் சவாரியில் தேர்ந்தவர்கள்.

சின்-கியாங்கின் ஆதிக் குடிகள் விளையாட்டு வேடிக்கைகளில் இன்பமாகக் காலங்கழிப்பதில் விருப்பமுடையவர்கள். தற்காலத்தில் சீன அரசியல் அலுவலர்கள் இப்பகுதிகளில் வசூலிக்கப்படவேண் டிய நிலவரியைத் தீர்மானிக்கின்றனர். இவர்கள் அந்தந்த மாவட்டத் தலைவர்களாக இருப்பதால் பெரும்பாலான பணம் அரசாங்கத்திற்குச் சேராமலே போகிறது. ஆனாலும் இப்பகுதி சீனாவினால் ஆளப் படுகிறது என்பதற்கு அதுவே போதுமான சான் றுமல்லவா ?

---

# 4. ஜப்பான்

'உதய சூரியன் நாடு' என்ற சிறப்புப் பெயரமைந்த ஜப்பான் நாட்டைப்பற்றி இன்று அறியாத மக்கள் இலர். உலகைப் படைத்த ஆண்டவன் அதன் நிலப்பரப்பில் முதன் முதல் ஏற்படுத்திய நாடு ஜப்பான். இயற்கை யழகு நிரம்பப்பெற்ற ஜப்பான் நாட்டிற்குப் பேரரசனுக, சூரிய தேவனின் பேரன் '**நினிங்கி**' மற்றத் தேவ கணங்களுடன் விண்ணுலகினின்றும் அனுப்பப்பட்டான். '**மிக்காடோ**' என்று அழைக்கப்படும் இன்றைய ஜப்பானின் பேரரசன், நினிங்கியின் வழிவந்தவன். அவனுடன் வந்த தேவ கணங்களின் வழித்தோன்றல் ஜப்பானிய மக்கள். இவ்வரலாறே தங்களின் ஆதி வரலாறு என்று ஜப்பானியர் மனப்பூர்வமாக நம்புகின்றனர்.

ஜப்பான் பல பெரிய, சிறிய தீவுகளைக் கொண்டமைந்துள்ள ஓர் நாடு. பசிபிக் பெருங்கடலில், ஆசியாவின் கிழக்கே சீனக் கடலால் பிரிக்கப்பட்டுச் சங்கிலித்தொடர் போன்று ஜப்பான் தீவுகள் தெற்கு வடக்காகப் பரவியுள்ளன. இத்தீவுகளில் நான்கு பெருந்தீவுகளும், சுமார் நாலாயிரம் சிறிய தீவுகளும் அடங்கியுள்ளன. இவற்றுள் சுமார் ஐந்நூற்று ஐம்பது தீவுகளில்தான் மக்கள் வசிக்கின்றனர்.

வடகோடித் தீவாகிய '**குறைல்**' தீவுகள் வறண்டிருப்பதால், அங்கு ஜப்பானியப் பழங்குடி மக்களான '**ஐனாஸ்**' என்ற கூட்டத்தாரும், ஒரு சில செம்படவர்களும்தான் வசிக்கின்றனர். இதற்குத் தெற்கில் '**ஹொக்காய்டோ**' அல்லது '**ஏஜோ**', '**ஹான்ஷு**' '**ஷிக்கோகு**' மற்றும் '**கியூஷு**' முதலிய பெருந் தீவுகள் உள்ளன. இத்தீவுகள் முழுவதிலும் மலைகளும்

அடர்ந்த காடுகளுமே நிறைந்துள்ளன. 'கியூஷூ' விலிருந்து 'லூச்சூ' தீவுகள் என்று சொல்லப்படும் ஐம்பது தீவுகள் நீண்ட சங்கிலித் தொடர் போன்று அமைந்துள்ளன. இவை தெற்கில் 'டைவான்' தீவு வரை (பார்மோசா) பரவியுள்ளன. 'சகாலின்' என்ற தீவின் ஒரு பகுதியும் ஜப்பான் நாட்டிற்குச் சொந்தமானது.

இந்நாட்டிற்கு அழகு தருபவை இயற்கையில் அமைந்துள்ள வானுயர் வெற்புகளும், அகன்ற ஏரி களும் நீண்ட நீரோடைகளுமேயாகும். இங்குள்ள **'பியூஜியாமா'** என்ற மாபெரும் எரிமலை உலகிலேயே சிறந்த அழகமைந்தது. இம்மலை **டோக்கியோ** நகருக்குச் சுமார் எழுபது அல்லது எண்பது கல் தொலைவில், சமவெளியில் அமைந்து பனி மூடிய சிகரத்துடன் விளங்குகிறது. இதனை எத்திசையி லிருந்தும், எப்பருவத்திலும் எந்நேரத்திலும் நோக்கி னும் இஃது சிறந்ததோர் அழகிய உறைவிடமாகவே காட்சியளித்து நிற்கின்றது. இதன் தெற்கில் கண் ணுக் கெட்டியவரை பரந்தமைந்த கடலும், வடக் கில் இதனைச் சூழ்ந்தமைந்த ஏரிகள் ஐந்தும் பொற் குடத்திற்குப் பொட்டிட்டதுபோல் அழகிற்கு அழகு செய்கின்றன. வாணுள் முழுமையும் இதன் கோலத் தைக் கண்டுகொண்டேயிருப்பினும் தெவிட்டா தெனின், அதனழகினைப்பற்றி என்னவென்று வரு ணிப்பது! ஜப்பானியர் இதனைத் தெய்வத்தன்மை பொருந்திய மலையெனக் கருதுகின்றனர். ஆண்டு தோறும் இதன் எரிவாயைக் காண ஏராளமான யாத்திரிகர்கள் பலர் இங்குக் கோடையில் கூடுகின் றனர்.

மலைகளும் ஆறுகளும் ஜப்பானுக்கு இன்பம் தருவது போன்றே துன்பத்தையும் விளைவிக்கின் றன. சுமார் ஐம்பது எரிமலைகளாவது இங்குக் கனல்

கக்கும் நிலையிலிருப்பதால், மக்கள் அடிக்கடி எரிமலை இயக்கத்தினாலும் மற்றும் அடிக்கடி ஏற்படும் நில நடுக்கத்தாலும் அவதியுறுகின்றனர். மேலும் பருவந் தவறுது ஏற்படும் காட்டாற்று வெள்ளப்பெருக்கினால் தாழ்ந்த சமவெளிப் பகுதியில் விளையும் உணவுப் பொருள்களுக்கு அழிவு ஏற்படுகிறது.

பூமியைத் தாங்கி நிற்கும் பெரியதோர் ஆமை யின் அசைவினால்தான் நிலநடுக்கம் ஏற்படுகிற தென்று முற்காலத்தில் மக்கள் எண்ணினர். இது கடவுளின் கோபத்தின் விளைவு எனக் கருதும் ஜப் பானியர் இன்றும் நில நடுக்கத்திற்கு அஞ்சி, அதனைப் போக்க, வெள்ளை அங்கியுடுத்து மண்டி யிட்டுப் பூகம்ப தேவதையைத் தொழுவதையும் நாம் சாதாரணமாகக் காணலாம்.

ஜப்பானியத் தீவுக் கூட்டத்தில் புனித மியா ஜிமா எனப்படும் மலைப்பாங்கான தீவு ஒன்று உளது. பைன் மரங்களும், அடர்ந்த புதர்களும் நிறைந் துள்ள இத்தீவில் இன்னொலி எழுப்பும் நீர் வீழ்ச்சி களும் பல உள. இத்தீவு கடலரசனின் மூன்று புதல்விகளுக்கு அர்ப்பணிக்கப்பட்டதொன்று என் பது ஜப்பானிய மக்களின் நம்பிக்கை. இத்தீவில் மூன்று கோவில்கள் உள்ளன. இத்தீவில் எவரையும் இறக்க விடுவதில்லை. வெளியூர்களினின்றும் வரும் இன்பச் செலவினர்க்கு இஃதோர் காணத்தகுந்த, சிறப்பும் அழகும் பொருந்திய இடம்.

ஜப்பானிய வரலாற்று ஆசிரியர்களின் கூற்றுப் படி, முன்னர்க் கூறப்பட்ட நினிங்கி வமிசம் இரண் டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்கு முற்பட்டது. கி. மு. அறுநூற்று அறுபதில் 'ஜிம்மு' என்ற பேரரச னால் ஜப்பானிய வமிசம் தோற்றுவிக்கப்பட்டது. இந்த 'ஜிம்மு' என்னும் பேரரசன் சூரிய தேவனின் நேர்வாரிசு வழிவந்தவன் என்பர்.

**'பூஜிவாரா'** என்ற ஒரு பிரபுவின் வமிசம்தான் ஜப்பானியப் பேரரசி தோன்றிய வமிசமாகும். 8ஆவது நூற்றுண்டு முதல் 12ஆவது நூற்றுண்டு வரை இவ்வமிசத்திலிருந்துதான் இராணியர் தேர்ந் தெடுக்கப்பட்டனர். அரசாங்கத்தின் முழு அதி காரமும் இவ்வமிசத்தினரிடமேயே இருந்தது. முடி சூட்டப் பெறும் அரசன் சிறு பருவத்தினனுக இருக் கும் நிலையில், அவனுக்கு அவனது பாட்டனே பாது காவலனுக இருப்பான். நாளடைவில் 'பூஜிவாரா' வமிசத்தினர் பலமிழந்தனர். அவர்களிடமிருந்து **'ஷோகன்'** என்ற படைத் தலைவர்களின் வமிசம் ஆட்சியைக் கைப்பற்றியது. பின்னர்க் கி. பி. 1868ல் தான் ஆட்சிப் பொறுப்பும், வலிவும் 'ஷோகன்' களிடமிருந்து மன்னர் கைக்கு மாறிற்று.

**'ஷிண்டோ மதம்'** என்பது ஜப்பானியரின் மிகப் பழைய மதம். இம் மதத்தினர் இயற்கை வணக்கத் தையும், முன்னேரை ஆராதிப்பதையும் கலந்து ஓர் புதிய முறையை மேற்கொள்கின்றனர். 'ஷிண்டோ' கோவில்கள் ஆடம்பரமற்ற சாதாரண எளியகுடிசை களாகவே உள்ளன. பிறகு 7ஆம், 8ஆம் நூற்றுண் டுகளில் புத்த மதம் சீனுவினின்று ஜப்பானுக்குப் பரவியது. புத்த மதத்தினுடனேயே சீனக்கலையும், கல்வியும் நாகரிகமும் ஜப்பானில் நுழைந்து பரவத் தொடங்கின. இன்றும் அப்புத்த மதமே ஜப்பா னெங்கிலும் பரந்து காணப்படுகின்றது.

கி. பி. 1542ல் ஜப்பானியருக்கும் போர்த்துகீசி யருக்கும் தொடர்பு ஏற்பட்டது. நாளடைவில் இரு நாட்டினரிடையேயும் வியாபாரத் தொடர்பு வலுத் தது. போர்த்துகீசியரைப் பின்பற்றி ஸ்பானியரும், பின்னர் டச்சுக்காரரும் ஜப்பானுள் நுழைந்தனர்.

இவ்வாறு வாணிகத்தின் பொருட்டு வந்தோரை யெல்லாம் வரவேற்றனர் ஜப்பானியர். ஐரோப் பியருடன் வாணிகத்தொடர்பு ஏற்பட்ட சிறிதுகாலத் தினுள் ஜப்பானுக்குக் கிறித்துவ மதக் குருமார்களும் வரவாரம்பித்தனர். இப் பாதிரிமார்கள் மதப் பிரச் சாரத்தை ஆரம்பித்ததோடு, மக்களை மதமாற்றமும் செய்தனர். இச் செயல் ஜப்பானியரிடைப் பெரும் வெறுப்பை ஏற்படுத்திவிட்டது. ஆகவே 17ஆம் நூற்றுண்டில் ஜப்பானியர் கிறித்துவ மதக்குருக்களை எதிர்த்ததுமின்றி, அயல்நாட்டினரனைவரையும் தங் கள் நாட்டைவிட்டு ஓட்டினர். கி. பி. 1636ஆம் ஆண்டில் செய்த சட்டத்தின்படி மேலைநாட்டைச் சேர்ந்த எந்த ஐரோப்பியனும் ஜப்பானில் அடி யெடுத்தும் வைக்கக்கூடாது என்கிற நிலை ஏற்பட் டது. எவ்வாறு அயல்நாட்டினன் தங்கள் நாட்டி னுள் அடியெடுத்து வைக்கக் கூடாதென்றனரோ அவ்வாறே ஜப்பானியெனவனும் தனது தாய்நாட் டுக் கடற்கரையை விட்டு நீங்கிச் செல்லக்கூடாது என முடிவு செய்தனர்.

எனவே ஜப்பான் வெளியுலகத்தோடு தொடர்பு கொள்ளாது தன்னந் தனியாகவே இருக்கவேண்டிய தாயிற்று. இந்நிலை இரண்டாண்டுகள் நீடித்தது. வெளி நாட்டுத் தொடர்பு வேண்டாமெனக் கருதிய தால் நாட்டின் பெரும் வாணிகக் கப்பல்களெல்லாம் உடைத்தெறியப்பட்டன. மீன் பிடிக்கும் படகுகளே மிகுந்தன. அப்பொழுது நெசவு, சாயம் தோய்த்தல், உலோக நுண்கலைத்தொழில், மரச் சித்திர வேலை, மட்கலம் செய்தல் முதலிய குடிசைத்தொழில்களே மக்களின் சிறப்பான தொழில்களாக இருந்தன.

19ஆம் நூற்றுண்டு வரையிலும் ஜப்பானின் முன்னேற்றம் மெதுவாகவே இருந்தது. 19ஆம் நூற்றுண்டின் இடைப் பகுதிக்குப் பின்னர்த்தான்

அது மிகவேகமாக முன்னேறத்தொடங்கியது. கி.பி. 1863ல் தான்மீண்டும் பிறநாடுகளுடன் வாணிகத் தொடர்பு ஆரம்பித்தது. அமெரிக்க ஐக்கிய நாடுகளைச் சேர்ந்த 'கமம் டோ பெரி' என்பவரின் முயற்சியால் இவ்விரு நாடுகட்கும் வியாபாரத் தொடர்பு ஏற்பட்டது.

பொதுவாக ஜப்பானிய மக்கள் உலகத்தோடு ஒட்ட ஒழுகக் கற்றவர். காலத்திற்கேற்பத் தங்களது நாகரிகத்தையும், கல்வி, கலாசாரங்களையும் திருத்தி அமைத்துக்கொள்ளும் பண்பினர். சிறப்பாக மேலை நாகரிகம் ஜப்பானியரின் நாகரிக வளர்ச்சிக்கு உறு துணையாக இருந்தது. சுருங்கக்கூறின், மேல் நாட்டு நாகரிகம் ஜப்பானில் புகுத்தப்பெற்றது. மேல்நாட்டு நிபுணர்களைக் கொண்டு நவீன கைத்தொழில்முறைகளில் பயிற்சி அளிக்க ஜப்பானியர் ஏற்பாடு செய்தனர். நாடு பூராவிலும் ஆயிரக்கணக்கான ஆரம்பப் பள்ளிகள் துவக்கப்பட்டன. நாளடைவில் கல்வி வெகுவாக முன்னேற்றம் அடைந்தது. இன்று ஜப்பானில் டோக்கியோ, ஒசாகா போன்ற பெரும் நகரங்களில் ஆறு பெரிய சர்வ கலாசாலைகள் இயங்கி வருகின்றன.

கல்வியில் ஏற்பட்ட மாறுதலைப்போன்றே, மற்றப் பொது வேலைகளிலும் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்பட்டன. கி.பி. 1870ஆம் ஆண்டு ஜப்பானில் முதன் முதலாக இயிரல் பாதை நிறுவப்பட்டது. இத்துறையிலும் முன்னேற்றம் வெகு துரிதமாக ஏற்பட்டது. நாட்டின் பல இடங்களையும் இரயில்பாதையின் மூலம் இணைத்தன; போக்குவரவு எளிதாகியது. இன்று அங்கு ஏறத்தாழ 15,000 மைல் தொலைவுக்கு மேல் இரயில் பாதைகள் ஏற்பட்டுள்ளன. தொழில் வளர்ச்சிக்கு வேண்டிய முக்கியமான மூலப்பொருள்களான நிலக்கரியும், மின்சாரமும் ஜப்பானில்

பெரும் அளவில் கிடைக்கின்றன. முதலாம் உலகப் போரின் காலத்தில் ஜப்பான் தனது உற்பத்தியை யும், வாணிகத்தையும் பெரும் அளவுக்குப் பெருக்கிக் கொண்டது. ஐரோப்பிய நாடுகளில் உண்டாக்கப் படும் எப்பொருளும் ஜப்பானியர் பார்வையிலிருந்து தப்ப முடியவில்லை. அவ்வாறு புதிய கண்டுபிடிப்புக் களில் இன்னும் முன்னேற்றத்தை உண்டாக்கி, தங் கள் தொழிற்சாலையில் குறைந்த நேரத்தில் சிக்கன மான செலவில் செய்து குவித்தனர். பொருள் உற் பத்தி பெருகவே, நாட்டில் பொருளாதார நிலையும் வளர்ந்தது. வாணிகம் பெருகியது. மக்கள் பெரும் பொருள் ஈட்டிச் செல்வந்தர்களானுர்கள். மக்க ளிடையே அரசியல் விழிப்பும், ஜனநாயக முறை களும் மிக விரைவில் வளரத் தலைப்பட்டன.

ஜப்பானிய வர்த்தகக் கப்பல்களின் எண் ணிக்கை உயர்ந்தது. ஏற்றுமதி வியக்கத் தக்க முறையில் பெருகிற்று. உலக மக்கள் வியக்கும் வண்ணம் 1940க்குள் ஜப்பான் எல்லாத் துறை களிலும், நாகரிகத்தில் மிக முன்னேற்ற மடைந் திருந்த மேலை நாடுகளின் நாகரிகத்தோடு சமமான நிலையை எட்டியது. இப்படி நாடு வெகுவாக முன் னேற்றம் அடைந்த அதே நேரத்தில், அதாவது, 1941ல் அமெரிக்காவோடு போர் மூண்டது. அப் போர் உலகப் போராக மாறுவதற்கு முன் அவ்விரு நாடுகளுக்கிடையில் நடைபெற்ற வாணிகத்தின் மதிப்பு ஆண்டுக்குப் பல கோடி டாலர்களாகப் பெருகியிருந்தது. 1945ல் ஜப்பான் இறுதியாகப் போரில் தோற்கடிக்கப்பட்டது.

ஜப்பானில் தொழிற்சாலைகள் பெருகியிருந் தாலும், அதன் முக்கியத் தொழில் விவசாயமே. ஜப்பானியரின் முக்கிய உணவு அரிசிச் சோறே. எனவே ஏராளமான அளவில் ஜப்பானில் நெல்

உற்பத்தி செய்கின்றனர். தங்கள் தேவைக்கும் போக எஞ்சியதை மற்ற நாடுகட்கு அனுப்பி ஏராள மான பொருள் ஈட்டுகின்றனர். விவசாயத்தில் புதிய புதிய முறைகளைக் கண்டுபிடிப்பதற்கு வேண்டிய பொருளுதவி முழுவதையும் செய்தவர் '**மிட்சுயீஸ்**' என்ற ஒரு ஜப்பானியச் செல்வந்தர் குடும்பத்தினர் தலைவர் **உநாஷி ரோமன் பிரபு** என்பாரே யாவார். இப்பிரபு உலகப் பெரும் பணக்காரர்களில் ஒருவர். இவரது குடும்பம் பதினொரு சிறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, வரையறுக்கப்பட்ட சட்ட திட்டங் களுக்குட்பட்டு, ஒரு சிற்றரசு போன்று நடைபெற்று வருகிறது. உலகில் பல்வேறு பகுதிகளில் நடை பெறும் பல்வேறு உற்பத்தி வாணிகத் துறைகளி லெல்லாம் இக் குடும்பத்தினருக்குப் பெரும் பங்கு உண்டு.

இவ்வமிசத்தைச் சேர்ந்த ஒரு பெண்மணி தனது முதலீட்டைக் கொண்டு ஜப்பானில் இன்றைய பாங்கி முறை வர்த்தகத்தைப் புகுத்தினர். மேலும் பெண்களுக்கென்று ஒரு சர்வகலாசாலையையும் அவரே தோற்றுவித்தார். 'மிட்சுயிஸ்' வமிசத்து மூலவர் தம் நிலத்தில் கிணறொன்று வெட்டுகையில் கிடைத்த செல்வம்தான் அவர்களது வாழ்க்கையின் முன்னேற்றத்துக்கு அடிகோலியது என்று சொல்லப் படுகிறது.

ஜப்பானிய மக்களில் பெரும்பான்மையோர் தழுவியுள்ள மதம் பௌத்த மதம். இருப்பினும் பல தேவதைகளைத் தொழும் பழக்கத்தையும் மக்கள் அதிகமாகப் பின்பற்றி வருகின்றனர். துறவறத்தை மேற்கொண்ட ஜப்பானியர் பௌத்த ஆலயங் களுக்கு யாத்திரை போவதையும், நோன்புகள் நோற்பதையும் முக்கியமாகக் கருதுகின்றனர். , **குவன்னுன்** 'தேவதையின் முப்பத்து மூன்று மலைக் கோவில்களுக்கும் பாதயாத்திரை செய்வது சிறந்த

நோன்பெனக் கருதப்படுகிறது. வெள்ளை அங்கி அணிந்து பக்திப் பாடல்களைப் பாடிக்கொண்டு யாத்திரிகர்கள் பெருங்குடும்பங்களாகவும் சிறு கூட்டங்களாகவும் செல்வர். குறிப்பிட்ட நாட்கள் தண்ணீரைத் தவிர வேறெதையும் உணவாகக் கொள்ளாத உண்ணு நோன்பும், புண்ணிய நீர்வீழ்ச்சிகளில் குளித்தலும், உறக்கமில்லா ஜெபங்களும் சிறந்த நோன்புகளாகக் கருதப்பட்டுக் கோவில்களில் மேற்கொள்ளப்படுகின்றன. இங்ஙனம் இறைவனை வழிபட யாத்திரை செல்லும் மக்கட்கு வழி நெடுகிலும் உள்ள கிராமவாசிகள் உணவும், இடமும் கொடுத்துத் துணை புரிகின்றனர். யாத்திரைக்குச் செல்லும் வழியிலேயே இறந்துவிடும் யாத்திரிகரை அங்குள்ள கிராம மக்கள் மிகுந்த மரியாதையுடன் அடக்கம் செய்கின்றனர். வாலிபர்கட்கு இத்தகைய மலை யாத்திரை ஒரு பயிற்சியாக அளிக்கப்படுகிறது.

இத்தகைய பயிற்சி யளிக்க மிக்க அனுபவம் வாய்ந்த ஆசிரியர்கள் இருப்பர். இவ்வாசிரியர்கள் **மலையேறும் குருக்கள்** எனப்படுவர். சூரிய தேவனின் 'ஐசே' ஆலயத்திற்குச் செல்வது சிறந்ததொரு யாத்திரையாகக் கருதப்படுகிறது.

ஜப்பானில் வாழும் மக்களில் சிறப்பானவர்கள் தெற்கிலிருந்து வந்தவர்கள். அம்மக்கள் மங்கோலிய இனத்தினின்றும் பிரிந்து வந்தவர் என்று கருதுகின்றனர். மற்றும் அவர்கள் மலேய, சீன மக்களின் இரத்தக் கலப்புள்ளவர்கள் என்றும் சொல்லப்படுகிறது. அவர்கள் இருண்ட நிறமும், சிறிய உருவமும், நல்ல உடலமைப்பும் கொண்டவர்கள்; அகன்ற மூக்கும், நேரான கண்களும் உடையவர்கள்.

ஜப்பானிய மக்கள் மிக்க சுறுசுறுப்பானவர்கள்; வேடிக்கை விளையாட்டுக்களில் பற்றுடையவர்கள்; அவர்கள் அழகை விரும்புவதோடு, போற்றவும் செய்கின்றனர்; குறைந்ததானாலும், நிறைந்ததானாலும் உள்ளதை வைத்து மனநிறைவு பெறும் பண்பினர்; எல்லோரிடமும் அன்பும் பணிவும் அடக்கமும் மரியாதையும் உடையவர்கள். இத்தகு பழக்கங்கள் அவர்களுக்குத் தொட்டிற் பழக்கங்களாகும். மூத்தவர்களிடம் பக்தியும், மனிதர்க்கு மனிதர் மரியாதையும், ஏழை பணக்காரனென்ற வேறுபாடின்மையும் அவர்களிடம் இயல்பாகவே உள்ள குணநலன்களாம். இதனுற்ருன் ஜப்பான் நாட்டைக் கண்ணியவான்களின் நாடு (Land of Gentlemen) என்றும் சொல்லுகின்றனர் போலும்! எத்தகைய கடினமான வேலையாயினும் கூர்ந்து நோக்கி, விரைவில் அதன் முறையைக் கண்டு எளிதில் முடிக்கும் ஆற்றல் அவர்களிடம் இயற்கையாகவே அமைந்துள்ளது. எச் செயலையும் பொறுமையுடன் சிறு தவறும் ஏற்படா வண்ணம் முழுக் கவனம் செலுத்தித் திருந்தச் செய்யும் அவர்களது பெருங் குணம் பாராட்டற்பாலது.

மற்ற நாட்டில் மக்கள் கட்டிக்கொள்ளும் வீடுகளைப்போல் ஜப்பான் மக்கள் தங்கள் வீடுகளை வலிவுள்ளதாகக் கட்டிக்கொள்ளுவதில்லை. ஜப்பானியரின் வீடுகளின் பெரும்பகுதி அட்டையினலும் மரச் சட்டங்களினலும் ஆனவை. வீட்டின் கூரை ஒன்றுதான் கெட்டியானபகுதி. வீட்டின் தரைப் பகுதி ஒரே பரப்பானது. ஆனல் அத்தரையை முன்னும் பின்னும் நகர்த்தக்கூடிய அட்டைத் தட்டிகளை வைத்துப் பல பகுதிகளாகப் பிரித்துக் கொள்வர். தரையின்மேல் பாய்கள் விரிக்கப்பட்டுள்ளன. வீட்டுக்கு ஒரு கரியடுப்பு தவருது இருக்கும்.

வீட்டின் நடுவில் உள்ள முற்றத்தின் மையத்தில் தாழ்வான நாற்காலியின்மேல் மலர்க் கொத்துடன் சீனக் கோப்பை காணப்படும்.

ஜப்பானியர் சாப்பிடும் முறையே புதுமை யானது. எல்லோரும் மண்டியிட்டுத் தரையில் தங்கள் பாதங்களின் மேல் உட்கார்ந்துகொண்டு எதிரிலுள்ள உணவை இரண்டு குச்சிகளின் உதவி யால் உண்ணுவர். பெரும்பாலும் ஜப்பானியர் அனை வரும் தூங்குவது தரையின்மீதுதான். சில சமயம் மிருதுவான விரிப்புகளின்மேல் தூங்குவர்.

ஜப்பானியர் தேநீர் குடிப்பதில் மிக்க விருப்ப முடையவர்கள். ஜப்பானியர் வாழ்க்கையில் தேநீர் விடுதிகள் சிறப்பிடம் பெற்றவை. நாட்டுப்புறங் களிலும், நகர்ப்புறங்களிலும் எங்கும் இத்தேநீர்விடுதி கள் உண்டு. பாட்டாளிகட்கும், பணக்காரர்கட்கும் ஏற்ற முறையில் தேநீர் விடுதிகள் அமைந்திருக்கும். கூரை வேய்ந்த ஒற்றை அறை விடுதிகளும், பல அறைகள் கொண்ட பகட்டான தேநீர் விடுதி களும் உள்ளன. மக்கள் தங்கள் தகுதிக்கு ஏற்ற தேநீர் விடுதிகளோடு தொடர்புவைத்துக்கொள்வர்.

இத்தகு விடுதிகள் தேநீர் வழங்குவதோடு அமைவதில்லை. பிரயாணிகள் தங்கவும், விருந்துகள் படைக்க வசதி கொண்ட உணவுச் சாலைகளாகவும் இவை இயங்குகின்றன. பெரும்பாலும் பெரிய தேநீர் விடுதிகளில் பணி புரியப் பெண்களே யிருப்பர். இப் பெண்கள் அழகிய உடையணிந்து ஓடியாடிப் பணி புரிவர். ஜப்பானியர் அருந்தும் தேநீரில் பாலும் சர்க்கரையும் சேர்ப்பதில்லையாகையால் நமக்கெல் லாம் அத்தேநீர் சுவைக்காது.

ஜப்பானில் தேநீர் விருந்து சர்வ சாதாரண மானது. உணவு விடுதிகளில் மட்டுமின்றி எங்கு

எத்தகைய நிலையிலுள்ளோரின் வீடு சென்றாலும் நம்மை வரவேற்க முதலில் தேநீர் கொடுப்பர்; பிறகு தான் மற்றக் காரியங்களைக் கவனிப்பர்.

தேநீர் விடுதிகளில் தங்க வேண்டுமென்றால் உடனே சில அட்டைத் தடுக்குகளைப் பயன்படுத்தி விரைவில் அறையை அமைத்துக்கொடுத்து விடுவர். அத்தகைய அறைகளில் இரண்டு தலையணைகள் தவிர வேறு வசதிகள் ஒன்றையும் எதிர்பார்க்கக் கூடாது. நகர்ப்புறங்களில் உள்ள தேநீர் விடுதிகள் மிகவும் அலங்காரமானவை. பெரும் விருந்துகள் கொடுப்பதாயின் செல்வந்தர்கள் இத்தகைய அலங் காரமான தேநீர் விடுதிகளில்தாம் கொடுப்பர். மகளிர் நடனமாடுதலும் உண்டு. விருந்தினர் அனைவரையும் தரையில் தங்கள் பாதங்களின்மேல் தான் அமரவேண்டும். சில சமயம் ஓரடி உயரமான மேசையைக் கொடுப்பர். அதன் மேலும் சில சமயங் களில் உணவு பரிமாறப்படும். பணிப் பெண்கள் முதலில் மிக்க மரியாதையுடன் மண்டியிட்டு விருந் தினர்க்குத் தேநீர் வழங்குவர். தேநீர் வழங்கிய பின்னர்த்தான் விருந்தினர் உணவு உண்ணத் தொடங்குவர். விருந்து முடிந்தவுடன் கெய்ஷா மாதர் நடனம் நடைபெறும். பல வண்ண உடை களில், வெளுத்த முக அலங்காரங்களோடு, கையில் சிறு விசிறியுடன் அபிநயம் பிடித்து ஆடும் அவர் களது இசையையும் நடனத்தையும் ஜப்பானியப் பெருமக்களே நன்கு ரசிக்கத்தக்கவராவர்.

ஜப்பானியர் தங்கள் சக்கரவர்த்தியிடம் பேரன் பும் பெருமதிப்பும் கொண்டவர்களாகையால் தங்கள் தங்கள் வீட்டில் ஓர் அறையைத் தனியாக அரசருக் கென ஒதுக்கி வைப்பர். அவ்வறைக்கு 'டோரி கானேமா அறை' என்று பெயர். ஜப்பானியர் தங்கள் தங்கள் வீடுகளிலுள்ள அவ்வறைகளைக்

கூடுமான வரையில் தூய்மையானதாகவும் அழகாக வும் வைத்திருப்பார்கள். அன்றுடம் பூத்துக்குலுங் கும் புதிய மலர்களைப் பறித்துப் பூத்தொட்டியில் வைத்து அறையை அழகுபடுத்துவார்கள். ‘அரசர் என்ருவது ஓர் நாள் வீட்டிற்கு வருவார்; அன்று அவரை வரவேற்றுத் தங்கவைக்க ஒரு சிறந்த அறை வேண்டுமல்லவா?’ என்பது அவர்களது உள்ளத்தின் அடியில் ஆழ்ந்து கிடக்கும் நம்பிக்கை.

ஜப்பானியர் உடுக்கும் அங்கி ‘கிமோனே’ எனப்படும். பெண்களின் ‘கிமோனே’ பகட்டான வண்ணங்களுடன் சித்திர வேலைப்பாடுகள் அமைந்ததாயும் இருக்கும். தொழில் முறைக் காரண மாக மேல் நாட்டுப் பாணியில் உடுக்கும் ஆண் களும் மாலையில் தங்கள் வீட்டில் தேசிய உடையான ‘கிமோனே’ உடைதான் அணிவர். ஜப்பானியர் பெரும்பாலும் மரத்திஞல் செய்யப்பட்ட பாதக்குறடு களே அணிவர். நம்மைப்போன்றே அவர்களும் பாதக்குறடுகளை வெளியில் கழற்றி விட்டுத்தான் வீட்டினுள் நுழைவர்.

பெரியவர்களைப் போன்றே சிருர்களும் ‘ஓபி’ என்னும் உடைகளை உடுத்துவர். சிறுமி அணியும் ஓபி விலையுயர்ந்த துணி வகையாகவும், பகட்டான பல்வகை நிறங்களுடனும் இருக்கும். பையன் அணியும் ஓபி சிறுமி அணிவதைப் போன்று பகட் டானதாக இல்லாவிடினும், மிகவும் பயனுடையதாக இருக்கும். பையனுக்கு ஐந்து வயதானதும் அவனைக் கோவிலுக்கு அழைத்துச் செல்வர். அங்கு அவன்

தன்னைக் காத்த கடவுளுக்கு நன்றி செலுத்துவான். பின்னர்ப் பூசாரியின் ஆசி பெற்றதும் அவனுக்கு **அகரமா** என்ற பட்டுக் கால் சட்டை அணிவிக்கப் படும். இவ்வுடையை அணிந்து அவன் நடந்து வரும்போது அவ்வுடையின் கலகலப்பொலி தன்னை வளர்ந்த மனிதன் என்று சொல்வது போன்று உணரச் செய்யுமாம். பொதுவாக நாம் வேட்டி கட்டுவதுபோல் அவர்கள் **டபி** என்ற மொத்தமான வெள்ளை உடையை அணிவர்.

தங்களை அலங்காரம் செய்து கொள்வதில் ஜப்பானியப் பெண்கள் வேறு எந்நாட்டவர்க்கும் சளைத்தவர்கள் அல்லர். அதிலும் பெண்கள் தங்கள் கூந்தலைச் சிறப்பாக அலங்காரம் செய்வதில் அதிகக் கவனம் செலுத்துகின்றனர். தலை அலங்கரிப்புக்கு இப்படி ஏராளமான நேரத்தைச் செலவிட வேண்டி யிருப்பதால் அவர்கள் வாரத்திற்கு ஒன்று அல்லது இரண்டு முறை மட்டுமே அலங்காரம் செய்து கொள்வர். பெண்கள் தூங்கும்போது தலையணை வைத்துக் கொள்வதில்லை. ஆனால் தங்கள் கழுத் துக்கு வளைவாகக் குடையப்பட்ட ஒரு மரச்சட் டத்தை அணையாக வைத்துக் கொள்ளுகின்றனர். இதனால் தூங்கும்போது தலை தரையில் படுவதும் இல்லை; தங்களது தலை அலங்காரம் கெடுவதும் இல்லை!

ஆண் மகனுக்குள்ள சிறப்பும், இடமும், பெரு மையும் ஜப்பானில் பெண்களுக்கு இருந்ததில்லை. பல நூற்றுண்டுகளாகவே அங்குப் பெண்கள் பணி யாளர்களாகவே நடத்தப்பட்டு வந்தனர்.

ஜப்பானில் குழந்தைகளைக் கைகளில் அணைத்துச் சுமந்து செல்வதில்லை. பெண்கள் முதுகிலேயே சுமந்து செல்வர். ஆகவே வளர்ந்த ஜப்பானியப் பெண்களின் முதுகில் அப்பெண்களின் தம்பியோ, தங்கையோ போர்வைத் துணியில் கட்டப்பட்டு இங்கும் அங்கும் தூக்கிச் செல்லப்படும் காட்சியைச் சாதாரணமாகக் காணலாம். முதுகில் குழந்தைகளைச் சுமந்து கொண்டே பெண்கள் விளையாட்டு முதற்கொண்டு எல்லாவிதமான வேலைகளிலும் ஈடுபடுவர். எந்நிலையிலும் குழந்தைகட்குத் தொந்தரவு ஏற்படுவதில்லை. அந்நிலை அவர்களுடன் தொன்று தொட்டு வந்த பழக்கமாகி விட்டது. இதற்காகப் பெண் குழந்தை நடக்க ஆரம்பிக்கும் போதே அதன் முதுகில் பொம்மையைக் குழந்தைபோல் கட்டி விட்டுப் பழக்குகின்றனர்கள்.

ஜப்பானியப் பெண் தான் பிறந்த வீட்டில் தந்தைக்கும், சகோதரர்கட்கும் பணிவிடை புரிவாள். பின்னர்ப் புகுந்த வீட்டில் தன் கணவனுக்கு ஏவல் புரிவாள். இந்நிலை உயர்வகுப்பு மக்களிடை அதிகமாகக் காணப்படினும், உழவர் போன்ற தொழிலாளிகளின் குடும்பங்களில் உழைப்பின் காரணமாகப் பெண்கள் ஆண்களுக்குச் சரிநிகர் சமமாகவே நடத்தப்படுகின்றனர். உலகில் உள்ள மற்றெல்லா நாடுகளிலும் பெண்களுக்கு அதிகச் சலுகையும் சுதந்திரமும் கொடுக்கப்பட்டு வருவது போன்றே ஜப்பானிலும் சமீப காலத்தில் அதிகச் சலுகையும், சுதந்தரமும் கொடுக்கப்பட்டு வருகின்

றன. ஜப்பானியப் பெண் கன்னியாயிருக்கையில் ஒரு சொர்க்கப் பறவை போன்றும், மணம் செய்விக்கப்பட்டு ஒருவனுக்கு மனைவியான பின் மாடப் புரு போன்றும், கணவனை இழந்த விதவை நிலையில் காகத்தைப் போன்றும் காட்சி அளிப்பாள் என்று சொல்லப்படுகின்றது.

ஜப்பானியப் பெண்கள் பெரிதும் மகிழ்ந்து போற்றும் பொருள்களில் முத்தும் ஒன்று. இதனை நன்கறிந்த ஜப்பானியர் செயற்கை முறையில் ஏராளமான முத்துக்களை எடுக்கும் வழி முறைகளை நீண்ட கால ஆராய்ச்சிக்குப் பின் கண்டுபிடித்து வெற்றி கண்டனர்.

உலகில் மற்றெல்லா இடங்களிலும் பொதுவாக இயற்கை முறையில்தான் முத்தெடுக்கின்றனர். முத்துக்குளிப்போர் கடலில் மூழ்கி முதிர்ந்து வளர்ந்துள்ள சிப்பிகளையே வெளிக்கொண்டு வருவார்கள். அவர்கள் அப்படிப் பல தொல்லைகட்கிடையில் ஆழ் கடலினடியிலிருந்து கொண்டுவரும் சிப்பிகளில் முத்தில்லாதவை இருப்பின் அவை அனைத்தும் வீணே. ஆனால் ஜப்பானியர் கடலில் மூழ்கி இளஞ் சிப்பிகளாகப் பார்த்துப் பொறுக்கி மேலே கொணர்வர். இத்தொழிலை ஜப்பானியப் பெண்களே செய்கின்றனர். பொதுவாகப் பத்தாண்டுக்காலம் உயிரோடிருக்கும் சிப்பி, முதல் மூன்றும் ஆண்டு முத்து ஆக்கும் பருவம் அடைகின்றது. எனவே முத்து ஆக்கும் பருவம் உடைய சிப்பிகளை மட்டுமே

பொறுக்கிக் கொணர்வர். இத்துறையில் ஜப்பானியப் பெண்கள் கைதேர்ந்தவர்கள். மேலே கொண்டு வரப்பட்ட முத்துச் சிப்பிகளை, முத்துத் தொழிலில் வல்லவர்கள், பழுதுபடாது திறந்து முத்துச் சிப்பி ஓட்டில் கடுகளவு எடுத்து, சதை நடுவில் வைப்பர். பிறகு அவைகளைப் பத்திரமான முறையில் பாது காப்போடு கடலுள் சில அடி ஆழத்தில்கிடக்குமாறு தொங்க விடுவார்கள். இரண்டு மூன்று ஆண்டு களில் உள்ளே வைக்கப்பட்ட கடுகு போன்ற சிப்பித் துண்டு சிறிய முத்தாக மாறிவிடும். இவ்வாறு ஏராள மான முத்துக்களை ஜப்பானியர் தயாரித்துக் குறைந்த விலையில் உலகெங்கும் விற்பனை செய்து பெரும் பொருள் ஈட்டுகின்றனர்.

ஜப்பான் நாட்டில் ஏறத்தாழ எல்லோருமே கல்வி கற்றவர்கள் என்று கூறலாம். மிக எளிய நிலை யில் உள்ளவர்கள்கூடத் தங்களுக்கு ஓய்வு கிடைக் கும்போது, செய்தித்தாள், மற்ற அறிவொளி வீசும் பத்திரிகைகள் ஆகியவற்றைப் படித்து உலகியல் அறிவைப் பெருக்கிக் கொள்ளுகின்றனர். உண்ணு வதும் உறங்குவதும் தங்களுக்கு எவ்வளவு முக்கி யமோ, அவ்வளவு முக்கியமாகக் கற்பதையும் எண்ணுகின்றனர். கல்லாதவர்கள் இழிகுடி மக்க ளாகக் கருதப்படுகின்றனர். ஜப்பானில் எல் லோருமே படித்தவர்களாதலால் தங்கள் தங்கள் குழந்தைகளை உரிய காலத்தில் பள்ளிக்கு அனுப்ப அவர்கள் தவறுவதில்லை.

ஜப்பானில் கல்வி முறை விஞ்ஞான அறிவு வளரவும், பொது அறிவியல் வளரவும் தக்கவாறு வகுக்கப்பட்டிருக்கிறது. இத்தகைய கல்வி மொத்தம் பதினாறு ஆண்டுகளில் கற்பிக்கப்படுகின்றது.

முதலில் மாணவர் எங்கும்போல் ஆறு ஆண்டுகள் தொடக்கக் கல்வி பெறுவர். இங்கு அவர்களது தாய்மொழி, சமூகம், கணக்கு, விஞ்ஞானம், இசை, ஓவியம், சிறு கை வேலைகள், கைத் தொழில், உடற் பயிற்சி முதலியன கட்டாயபாடங்களாகக் கற்பிக்கப் படுகின்றன. இக்கல்வி கற்பிக்கும் பள்ளிகள் இருபதினாயிரம் வரை நாடெங்கும் இருக்கின்றன. தொடக்கக் கல்வியை முடித்த மாணவன் அடுத்துப் பெறும் கல்வி, கீழ்நிலைக் கல்வி. இக்கல்வியை மூன்று ஆண்டுகள் படித்தல் வேண்டும். இங்குக் கட்டாயக் கல்வி, விருப்பக் கல்வி என்னும் இருதலைப்புகளின் கீழ்ப் பாடங்கள் போதிக்கப்படுகின்றன.

கீழ்நிலைக் கல்வி முடித்தவன், அடுத்துக் கற்க வேண்டிய கல்வி, மேல் நிலைக்கல்வி. இக்கல்வியையும் மூன்று ஆண்டுகள் கற்கவேண்டும். இங்குக் கல்வி இரு பிரிவாகக் கற்பிக்கப் படுகின்றது. ஒன்று தொழிற்கல்வி; மற்றொன்று பல்கலைக் கழகக் கல்வி பெறத் தகுதியாக்குதல். இத்தகைய கல்வியைக் கற்பிக்க ஜப்பானில் மூவாயிரத்துக்கு மேற்பட்ட பள்ளிகள் உள்ளன.

தொழிற் கல்வி பெற்றவன் தொழில்துறைக்குச் சென்றுவிடுவான். பல்கலைக் கழகக் கல்வி பெறத்

தகுதி பெற்றவன், கல்லூரிகளில் சேர்ந்து விருப்பமான பாடமொன்றைத் தேர்ந்தெடுத்து, நான்கு ஆண்டுகள் படித்துப் பட்டம் பெறவேண்டும். இத்தகைய கல்லூரிகள் நாடெங்கிலும் அறுநூற்றுக்கும் மேற்பட்ட எண்ணிக்கையுடையனவாக இருக்கின்றன.

பள்ளிக்குச் சென்று படிக்கமுடியாத நிலையில் உள்ளவர்கள் தங்கள் வீடுகளிலிருந்தவாறேபடித்துத் தேர்வு எழுதிப்பட்டம்பெறலாம். இத்தகைய உயரிய நோக்கங் கொண்ட கல்வி முறையினால் ஜப்பானியர் அனைவருமே கற்றவர்களாக்கப்படுகிறார்கள்.

ஏட்டுக் கல்வியோடு நில்லாது, தொழிற் கல்வியும் இளமைமுதற்கொண்டே கற்பிக்கப்படுகின்றது. இன்று ஜப்பானியர் உலக நாடுகளின்முன் தொழில் துறையில் தலைநிமிர்ந்து நிற்பதற்குக் காரணம் அவர்கள் பெறும் கல்விமுறையே எனத் துணிந்து கூறலாம். இத் தொழிற்கல்வி நிலையங்களில் பணியாற்றுபவர்கள், பல புதிய புதிய கண்டுபிடிப்புக்களைக் கண்டு தங்கள் நாட்டு வாணிகத்தை வெகுவாகப் பெருக்கிக் கொள்ளப்பாடுபடுகின்றனர்.

ஜப்பானியக் குழந்தைகள் பள்ளிக்குச் சென்றதும், அவர்களது ஆசிரியர் முன் குனிந்து, தங்கள் நெற்றியால் தரையைத் தொட்டு, வணக்கம் செய்வார்கள். இவ்வாறு வணங்கும்போது, மூச்சைப் பாம்பு சீறும் ஒலியுடன் உள்ளுக்கிழுப்பர். இது அவர்களது ஆழ்ந்த மரியாதையின் சின்னம். பதி

லுக்கு ஆசிரியரும் குனிந்து மரியாதை செய்வர். பின்னர்த்தான் குழந்தைகள் பாடம் கற்க அமருவார்கள். அவர்களது புத்தங்களில் எழுத்துக்கள் பெரியவையாயும், தலைகீழாயும் அச்சடித்திருக்கும். மேலும் பின்பக்கத்திலிருந்து ஆரம்பித்து முன்பக்கமாக முடிவுபெறும். குழந்தைகள் எழுதுவதற்குப் பேனுக்களைப் பயன்படுத்துவதில்லை. மையில் தொட்டுத் தூரிகையினுல் எழுத்துக்களை எழுதுகிருர்கள். பள்ளியில் கற்கும் பாடங்களைத் தவிரக் குழந்தைகள் வீட்டில் பெற்ருேருடன் கலந்து அவர்களிடமிருந்து பல நல்ல பழக்கங்களைக் கற்கின்றனர். பெரியவர்களிடமும், பொதுவாக மற்றவர்களிடமும் எப்படி மரியாதையாக நடந்துகொள்வது என்பது மிக உன்னிப்பாகப் பெற்ருேர்களால் கற்பித்துத் தரப்படுகின்றது. தங்கட்கு நிகரானவர்கட்கும் தங்களில் உயர்ந்தவர்கட்கும், தாழ்ந்தவர்கட்கும் என்று வகை வகையான வணக்கங்கள் அவர்களிடை உள்ளன.

எப்படி நடப்பது, எப்படிக் குனிந்து மரியாதை செய்வது, மூத்தோர் முன் எப்படி மண்டியிட்டு வணங்கி நெற்றியால் தரையைத் தொடுவது, இச் செயல்கள்செய்யும்போது,அழகாகவும் ஆடைகளின் மடிப்புக் கலையாமலும் எப்படிச் செய்வது என்னும் பயிற்சிகளை ஜப்பானியர் குழந்தைகளாக இருக்கும் போதே கற்கின்றனர். ஒவ்வொரு பையனும் பெண்ணும் தத்தம் பெற்ருேர்கட்கும் அரசருக்கும் கடமைப்பட்டவர் என்கிற எண்ணத்தைக் குழந்தைப் பருவத்திலேயே அவர்கள் உள்ளத்தில் ஊன்றிவிடு

கின்றனர். மற்றெல்லாக் கடமைகளைக் காட்டிலும் இக் கடமை பெரிதென ஒவ்வொரு ஜப்பானியனும் முடிவாக எண்ணுகின்ருன்.

ஜப்பானில் விளையாட்டுகளில் சிறந்தது மற்போர். விழாக்காலங்களில் சிறப்பாக மற்போர் நடைபெறுவது வழக்கமாயுள்ளது. எப்படியிருப்பினும் ஆண்டுக்கு இருமுறை மற்போர்ப் போட்டிகள் ஜப்பானின் தலைநகரமான டோக்கியோவில் நடைபெறுகின்றன. மல்லர்கள் உயரமாகவும் உறுதியாகவும், தலையில் குடுமியுடனும் காணப்படுகின்றனர். மற்போரில் எதிரியின் குடுமி தரையைத் தொடும்படி செய்பவன் எவனே அவனே வெற்றி பெறுகின்ருன்.

ஜூ-ஜூட்சு அல்லது ஜூடோ என்று சொல்லப்படும் விளையாட்டு முற்றிலும் வேறுபட்டது. இவ் விளையாட்டைத் தற்காப்புக்கலை எனலாம். இதில் வெல்பவன், எதிரியின் வலிமையை எதிரியின் வீழ்ச்சிக்கே பயன்படுத்தி விடுகிருன். இக்கலை வாழ்க்கையில் அதிக பயனுடைய தாகையால் பள்ளிகளிலும் மாணவர்கட்கு இவ்விளையாட்டு கற்பிக்கப்படுகின்றது. மற்றும் மாணவர்களின் ஆட்டங்களில் ‘பேஸ்பால்’ என்பதும் ஒன்று. ஜப்பானில் பெரும்பான்மையான மக்கள் ‘டென்னிஸ்’ ஆடுகிருர்கள். இன்றைய ஜப்பானிய இளவரசரான அக்கி ஹிட்டோவும், அவர் தம் மனைவியாரும் சிறந்த டென்னிஸ் ஆட்டக்காரர்கள்.

பட்டம் பறக்க விடுதல், பம்பரம் ஆடுதல் முத லிய விளையாட்டுக்கள் குழந்தைகளுடையவை. பெண்கள் வீட்டிலிருந்தவாறே மலர்களை அழகுற அடுக்கும் கலையை விளையாட்டெனக் எண்ணிக் கற் கின்றனர்.

ஜப்பானிய மக்கள் சிறந்த ரசிகர்கள்; அழகினைக் கண்டு ஆனந்திக்கும் உள்ளம் கொண்டவர்கள். அழகு நிரம்பிய மலர்ச் சோலைகள் நூற்றுக் கணக் கான கல் தொலைவிலுள்ளது எனினும் சிறிதும் பின் வாங்காது நடந்தே சென்று பார்த்து வருவர். ஜப் பானில் ஆண்டு முழுமையும் பலவகைப் பூக்கள் மலர்ந்து அழகினை அள்ளி வீசிய வண்ணமாகவே இருக்கும். எனவேதான் இந்நாட்டை '**மலர் பூத்த நாடு**' என்று கூறுவதிலும் தவறென்றையும் காண முடிவதில்லை. ஜப்பானியர் தங்கள் வீடுகளில் மூன்று அங்குல உயரமே வளரும் ஒருவகைக் குட்டை மரங் களை, சீனக் கோப்பைகளில் அமைத்து, வளர்த்து வருகிறார்கள். இவை வீடுகளை அலக்கரிக்கப் பயன் படுத்தப்படுகின்றன.

மலைப் பாங்கான இந்நாட்டில் விவசாயத்துக்குப் பயன்படக்கூடிய ஒவ்வோர் ஏக்கர் நிலமும் நன்கு பண்படுத்தப்பட்டு, நல்ல உரமிட்டுச் சிறப்பான முறையில் நெல் சாகுபடி செய்யப்படுகின்றது. ஜப்பானில் சாகுபடி முறை நல்ல பலனைக் கொடுப்ப தால் நம் நாட்டிலும் அம் முறையைப் பின்பற்ற நம் இந்திய அரசாங்கம் உழவர்களைத் தூண்டுகிறது.

மலைச் சாரல்களில் கோதுமை, பார்லி, தேயிலை ஆகியவை பயிரிடப்படுகின்றன. இங்குச் சராசரி பண்ணைக்கு 2½ ஏக்கர் நிலம்தான் கிடைக்கிறது. ஆகவே விளைச்சல் போதுமான தன்று. ஆனால் ஜப்பான் தனக்கு வேண்டிய அதிகப் படியான கோதுமை போன்ற உணவுப் பொருள்களைக் கனடா, அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகிய இடங்களிலிருந்து இறக்குமதி செய்து கொள்ளுகின்றது.

விவசாயிகள் தங்கள் வீடுகளில் வேறு குடிசைத் தொழில்களையும் செய்து வருகின்றனர். இவற்றில் பட்டுத் தொழில் மிகவும் முக்கியமானது. ஒவ்வொரு விவசாயியின் வீட்டினுள்ளும் பட்டுநூல் சுற்றப்படும் சலசலப் பொலியும், முற்றத்தில் பட்டுப்பூச்சிக் கூடுகள் உலர்வதையும் சாதாரணமாக ஜப்பானில் காணலாம்.

ஜப்பானில் மூங்கில் உற்பத்தி மிகுதியாக உள்ளது. அம் மூங்கிலைப் பயன்படுத்தி ஜப்பானியர் கூடைகள், அலங்காரப் பொருள்கள், பேனுக்கட்டைகள், விளக்குக் கம்பங்கள், சிற்றுருவங்கள், கைத்தடிகள், மீன் பிடிக்கும் கழிகள், வெயிலை மறைக்கும் தொப்பிகள், சிகரெட்டுக் குழைகள் எனக் கணக்கில் அடங்காத பொருள்களை உற்பத்தி செய்கின்றனர்.

இந்தியாவில் நாம் வேண்டாமெனக் கழிவுப் பொருளாக ஒதுக்கும் தகரத்துண்டுகளைக் கொண்டு பிள்ளைகள் விளையாடுதற்கேற்ற மோட்டார் வண்டி

கள், பீரங்கி வண்டிகள், விமானங்கள், கப்பல்கள், இரயில் வண்டிகள் முதலியவற்றை ஜப்பானியர் செய்து அவைகளை நமக்கே மீண்டும் அனுப்பிப் பணமாக்கிக் கொள்ளுகின்றனரெனின் அவர்கள் திறமையைப் பற்றிக் கூறவும் வேண்டுமா ?

பருத்தித் துணி உற்பத்தியிலும் ஜப்பானியர் எந்நாட்டவர்க்கும் சளைத்தவர்கள் அல்லர். பருத்தித் துணி விற்பனையில் ஜப்பானியரிடம் போட்டி போடுவதில் மேனாட்டு ஆலை முதலாளிகளாலும் ஈடு கொடுக்க முடியாது இருக்கின்றது.

மற்றும் காகிதத் தொழில், கடிகாரத்தொழில், காமிராத் தயாரிக்கும் தொழில், பவுண்டன் பேனாத் தொழில் முதலிய தொழில்களிலும் ஜப்பானியர் முன்னணியில் நிற்கின்றனர். மேற்கூறிய தொழில்களெல்லாம் ஜப்பானில் குடிசைத் தொழில்களாக இருந்து வருகின்றனவெனின் நாம் ஆச்சரியப்படுவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை! இரும்பைக் கொண்டு செய்யப்படும் எஃகுக் குழாய்கள் முதல் திருகு ஆணிகள் வரையும் மற்றும் எஞ்சின்கள், வானொலிப் பொறிகள் முதலியனவும் மிக்க எளியமுறையில் கண்டோர் வியக்கும் வண்ணம் குறைந்த விலையில் அற்புதமாகச் செய்யப்படுகின்றன.

இப்படி அவர்கள் தொழில் துறையில் மிகுந்த முன்னேற்றம் அடைந்திருப்பதற்குக் காரணம் என்ன தெரியுமா ? எத்தகைய பெரிய பொருளை உற்பத்தி செய்வதாயினும், செய்ய விரும்பும் அப்

பொருளின் பாகங்களைப் பகுதி பகுதியாகப் பிரித்து எளிய குடிசைகளிலிருந்தவாறே தயாரிக்கின்றனர். பகுதிப் பொருள்கள் எல்லாவற்றையும் சேர்த்து ஒன்றுடன் ஒன்றைப் பூட்டி விரைவில் வேலையை முடித்து விடுகின்றனர். மோட்டார் வண்டியாயினும் சரி, கடிகாரமாயினும் சரி எல்லாப் பொருள் களும் இம்முறையில்தான் தயாரிக்கப்படுகின்றன.

ஜப்பானியர் எதனையும் வீணாக்குவதில்லை. மூலப் பொருளாக வெளி நாடுகட்கு அனுப்பாது செய்பொருள்களாக வெளி நாடுகட்கு அனுப்பி ஏராளமான பொருளை ஈட்டுகின்றனர். இவை போதாவென்று கடலில் கிடைக்கும் ஒருவகைத் தங்க மீன், அரக்க நண்டுகள், மரத்தில் இலைக் கூட்டில் முட்டையிடும் ஒந்தித் தவளைகள் முதலியவைகளை யும் ஜப்பானியர் வாணிகப் பொருள்களாக மாற்றிப் பணம் திரட்டுகின்றனர்.

ஜப்பானிய மக்கள் முடியாட்சியில் பல்லாண்டு கள் பழகி யிருப்பதால், இன்று நாகரிக முன் னேற்றப் பாதையில் சென்று கொண்டிருப்பினும், பழமையான முடியாட்சியிலேயே வாழ ஆசைப்படு கின்றனர். ஜப்பானியர் தங்களைத் தனி மனிதர்க ளாகக் கருதுவது இல்லை. தங்களை ஒரு குடும்பத் தின் உறுப்பினர், சங்கத்தின் அங்கத்தினர், போர்ப் படையின் வீரர் அல்லது தனிப்பட்ட நாட்டின் குடி மக்கள் என்று தாம் கருதிக்கொள்ளுகிறார்கள். மிக்க சுறுசுறுப்பும், கூரிய அறிவுத் திறனும், நல்ல

உடல் வலிவும் கொண்ட ஜப்பானியர் தங்கள் நாட்டின் நலனுக்காகவும், அரசாங்கத்துக்குச் செய்ய வேண்டிய கடமைகளுக்காகவும் தேனீக்கள் போல் ஒன்றுபட்டு என்றும் விரைந்து உழைத்த வண்ணமாகவே இருக்கின்றனர்.

---

# NADUM MAKKALUM

NINETH STANDARD

(New Syllabus)

By

D. PALANIVELU, B. A., B. T.



**ASSOCIATION PUBLISHING HOUSE**

**94-95, New Street, Mannady, Madras-1.**

**Price : Re. 1/-**

---

Venkatesan Press, Madras-1.